# இழந்த கண்ணொளியை மீண்டும் பெறுங்கள்




கண்படலம் மற்றும் இதர கண் வியாதிகளை ஆபரேஷன் இல்லாமலே குணப் படுத்துகிறது.

உலகப் பிரசித்தி பெற்ற டாக்டர் பூச் (வியன்னா) அவர்களின் முறைப்படி தயாரித்தது. பல்லாயிரக் கணக்கான டாக்டர்களால் உபயோகிக்கப் பட்டு வெற்றி யளித்திருக்கிறது.

இராத்திரி அல்லது காலையில் ஒரே ஒரு துளி ஐடால் கண்களில் போட்டுக்கொண்டால் போதும். பூரணமாக நிவர்த்தி யளித்து கண்ணொளியை மீண்டும் அளிக்கிறது.

கண்களை வெய்யில், வெப்பம், வெளிச்சம், புழுதி, அனல், அதிக வேலை முதலிய கெடுதல்களிலிருந்தும் உங்களைக் காப்பாற்றுகிறது. பிரதியொரு பாக்கெட்டிலும் உத்தரவாதம் அடங்கியிருக்கிறது.

பாக்கெட் விலை ரூ. 3/12.
தபால் பாக்கிங் செலவு தனி.
எல்லா கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும் அல்லது




B. C. ஹகேஜ் & கோ.,
த. பெ. 169
பம்பாய்

ஸ்டாகிஸ்ட்டுகள்:
ஸ்பென்ஸர் & கோ., லிமிடெட்
மவுண்ட் ரோட் — மதராஸ்

கடவுளின் கோவிலுக்கான
## பரிசுத்தம்




தெய்வீகத்திற்கும் பரிசுத்தம் இன்றியமையாதது. மிகவும் சுத்தமளிக்கும் சடங்காசார ஸ்நானங்களுக்கு அதிசயமான ஸோப்பைச் மட்டுமே நாம் உபயோகிக்க வேண்டும். ஸோப்பில் ஏது கலப்பு மிருக்கலாம். ஆனால், கோத்ரேஜ் ஸாண்டலில் நன்மை தரும் கலப்பற்ற தாவர எண்ணெய்ச் சத்துக்களே, கோத்ரேஜ் சௌந்தரியப் பொருட்களெல்லாம் உள்ளன போன்று, தனிமைப்பட உபயோகப்படுத்தப் பட்டுள்ளன. வெறுக்கத் தக்க மிருகக் கொழுப்புகள் யாதும் அவைகளில் இல்லை. சுய மைசூர் சந்தனத் தைலம் யதேஷ்டமாய்ப் பொருந்தப் பெற்ற கோத்ரேஜ் சந்தன ஸோப்பானது இன்பமான குளிர்மை, இதம், மணம் இவைகளையுடைய நுரையை யளிக்கும். எனவே, சரீரம் கடவுளின் கோவிலாயிருக்க, அதைத் தூய்மைப் படுத்த கோத்ரேஜ் தாவர வஸ்து ஸாண்டல் ஸோப்பல்லாது வேறெதுதான் ஏற்றதாகும்?



கோத்ரேஜ் விம்டா: கிருமிகளைக் கொல்லவும் சொஸ்தமளிக்கவும் வல்ல வேம்பின் குணங்களையுடைய ஸோப்.




## கோத்ரேஜ் சாவி மார்க் ஸாண்டல் ஸ்நான ஸோப்

கோத்ரேஜ் ஸோப்ஸ், லிமிடெட்.
மதராஸ் (154, பிராட்வே): கோயமுத்தூர் (சிங்காநல்லூர்)



## ஓர் சுலபமான இரகசியம்

டாம்கோ கூந்தல் தேங்கா யெண்ணெயை தலையில் தடவி நன்கு தேய்த்தல் மயிர்க் கால்களுக்கு போஷணை யூட்டுகிறது. டாம்கோ தேங்கா யெண்ணெய் ஷாம் பூவால் வாரத்திற்கோர் முறை அலசிக் கழுவல் கூந்தலை யெப்பொழுதும் சுத்தமா யிருக்கச் செய்வதுமன்றி அதன் இயற்கை பளபளப்புடன் சோபிக்கவும் செய்கிறது.

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்.,
டாடாபுரம் :: பம்பாய்




பகவானின் பத்து அவதாரங்கள்

மச்சம் முதல் — கல்கி — வரையில்

மகா உன்னதமாகத் தயாரிக்கப்பட்டுள்ளன.

ஸர் ராதாகிருஷ்ணன் கூறுகிறார் :—

"சீன், உடை, காட்சி, நடிப்பு, நடனம், சங்கீதம் இவற்றில் சிறந்து விளங்கும் இந்நாடகத்தின் மூலம் நவாப் ராஜமாணிக்கம் மக்களுக்கு அரிய சேவை செய்து வருகிறார்" — ஆம் இதுவே எமது லட்சியம்.

எமது புதிய தயாரிப்பான

# தசாவதாரம்

நாடகம்

இந்த லட்சியத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளது.

13-4-45 வெள்ளிக்கிழமை முதல் பிரதி தினமும்

திருவனந்தபுரம் சித்ரா தியேட்டரில்

நடைபெற்று வருகிறது.

புதிய முறையில் — பொருட் செலவில் தயாரானது.

சர்ப்ப நடனம் — மோகினி நர்த்தனம்

தேவமாதர் நாட்டியம்—யாவும் அற்புதம்!

ஒரு முறை கண்டு ஆசி கூறுங்கள்.

★

மதுரை தேவி பால விநோத சங்கீத சபா

நாடகக் கலையரசு, நாடகக் கலாநிதி, நாடகக் கேசரி,

நவாப் டி. எஸ். ராஜமாணிக்கம் — உரிமையாளர்.

ஒவ்வொரு இல்லமும் பணியும் பெயர்!
ஒவ்வொரு உள்ளமும் விரும்பும் கதை!
ஒவ்வொரு கலைஞனும் போற்றும் கானம்!



**3** வது
**வாரம்**



பிரகதி

# ஸ்ரீ வள்ளி

டைரக்ஷன்:-
AV. மெய்யப்பன் &
A.T. கிருஷ்ணஸ்வாமி






மலர் 4 | 1945 ஏப்ரல் 29 | பார்த்திப௵
இதழ் 38 | | சித்திரை 17



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

* * *

## ருஷிய வெற்றி மலர்

மே மாதம் 6-ல் வெளியாகும் "கல்கி" இதழ் "ருஷிய வெற்றி மல"ராக வெளிவரும். ருஷியாவின் புதிய ஆதர்சம், புதிய ஜனசக்தி, புது இயக்கத்தின் தலைவர்கள், தளபதிகள், விஞ்ஞானிகள் முதலியவர்களைப் பற்றிய விவரங்கள், படங்கள், கதைகள் அடங்கியிருக்கும்.

# மனோஹரி - ராஜ் :: திருமணம்



ஸ்ரீ G. K. வேல் அவர்களின் மூன்றாவது குமாரி சௌ. மனோஹரிக்கும், பெங்களூர் ஸ்ரீ T. J. கோவிந்தராஜ முதலியார் அவர்கள் குமாரரும், எம். இ. எஸ். அஸிஸ்டெண்ட் காரிசன் எஞ்ஜினீர் ஸ்ரீ G. V. ராஜ் பி. ஏ., பி. எஸ்ஸி. (டெக்) அவர்களுக்கும், 18-4-45 வியாழனன்று தேனாம்பேட்டை "லக்ஷ்மி ஹவுஸ்" என்னும் மணமகன் இல்லத்தில் விவாஹம் சிறப்பாக நடந்தேறியது. அன்று காலை நடந்த திருமண வைபவத்திற்கும், மாலை நடந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இசை விருந்திற்கும் நகரத்தின் பிரபலஸ்தர்கள் அநேகர் விஜயம் செய்தனர்.

**10-4-45** அன்று மே. த. கவர்னர் தம்பதிகளின் தலைமையில் - மாட்சிமை தங்கிய அரசர் படைகளின் உத்தியோகஸ்தர்களுக்கு ஸ்ரீ G. K. வேல் அவர்களால் அவரது இல்லத்தில் ஓர் உயர்ந்த விருந்தளிக்கப் பட்டது. இதற்கும் நகரத்தின் பிரமுகர்கள் விஜயம் செய்தனர்.




மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 38

# என்ன சேதி?

## கொடி பறக்கிறது!

எல்லைப்புற மாகாணத்தில், தலை நகரமான பெஷாவரில், சென்ற 22-ல் ஞாயிற்றுக்கிழமை ஓர் அதிசய சம்பவம் நடைபெற்றது. விஸ்தாரமான மைதானத்தில் பதினாயிரக் கணக்கான ஜனங்கள் திரண்டு நின்றார்கள். சிகப்புச் சட்டை அணிந்த ஆயிரம் தேசத் தொண்டர்கள் அணிவகுத்து நின்றார்கள். இந்த மகா ஜனத்திரளுக்கு மத்தியில் ஸ்ரீ புலாபாய் தேஸாய் மூவர்ண தேசியக் கொடியைத் தூக்கிப் பறக்க விட்டார்! ஜனங்களின் ஆரவார முழக்கம் ஆகாசத்தை அளாவியது. ஆயிரம் குரல்களிலிருந்து எழுந்த தேசிய கீதம் நாலாபுறமும் பரவியது.

## இதுதான் வித்தியாசம்

சில நாளைக்கு முன்னால் இங்கே சென்னை மாகாணத்தின் தலைநகரான சென்னை நகரிலும் ஒரு அரசியல் மகாநாடு நடந்தது. இதைத் திறந்துவைக்க பம்பாயிலிருந்து சாக்ஷாத் மேயர் நகின் தாஸ் மாஸ்டர் வந்திருந்தார். ஆரம்பத்தில் மகாநாட்டில் நானூறு பேர் இருந்தார்கள். அந்த நானூறு பேர் போகப் போக நாற்பது பேர் ஆகிவிட்டார்கள். தேசியக் கொடி ஏற்றத்துக்குப் போலீஸ் அநுமதி கிடைக்காத படியால் கொடி ஏற்றம் கை நழுவ விடப்பட்டது!—இதுதான், காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சி செலுத்தும் மாகாணத்துக்கும், காங்கிரஸ் சங்கங்கள் நடைபெறும் மாகாணத்துக்கும் வித்தியாசம்!

## அபிப்பிராய ஒற்றுமை

இந்தியா மந்திரி கர்னல் அமெரி சென்ற வாரத்தில் ஒரு அபூர்வமான உண்மையைப் பார்லிமெண்டு சபையில் எடுத்துச் சொன்னார். சென்னை, பம்பாய் முதலிய மாகாணங்களில் 93-ம் பிரிவின் ஆட்சியை இன்னும் ஒரு வருஷத்துக்கு நீடிக்கச் செய்யும் மசோதாவைக் கொண்டுவந்த போதுதான் அந்த அபூர்வ உண்மையைச் சொன்னார். "இந்த மசோதா இப்போது என்னத்திற்கு? எல்லைப்புற மாகாணத்தில் ஏற்பட்டதுபோல் மற்ற மாகாணங்களிலும் ஜனங்களின் ஆட்சியை ஏற்படுத்தக் கூடாதா?" என்று ஒரு அங்கத்தினர் கேட்டாராம். அதற்குக் கர்னல் அமெரி, "இல்லை இல்லை; எல்லைப்புற மாகாணத்து நிலைமை விசேஷ நிலைமை!" என்றாராம். நம் நாட்டிலுள்ள அதி தீவிர காங்கிரஸ் சங்கக்காரர்களுடைய மனம் குளிரக்கூடிய பதில் அல்லவா? "எல்லைப்புற மாகாணத்தில் விசேஷ நிலைமை!" என்ற பல்லவியைத்தானே இவர்களும் பாடி வருகிறார்கள்! ஆகா! எப்பேர்ப்பட்ட அபிப்பிராய ஒற்றுமை!

## விசேஷ நிலைமை எது?

"எல்லைப்புற மாகாணத்தில் விசேஷ நிலைமை" என்பதை பம்பாய் மேயர்கூடச் சென்னையிலே வந்து வெளியிட்டார். அது என்ன விசேஷ நிலைமை என்று பார்க்கலாம். சென்னை முதலிய மாகாணங்களில் 93-ம் பிரிவின் ஆட்சி நடைபெறுகிறது; எல்லைப் புறத்தில் முஸ்லிம் லீக் ஆட்சி நடந்தது. முஸ்லிம் லீக் ஆட்சியைக் காட்டிலும் 93-ம் பிரிவின் ஆட்சி உயர்ந்தது என்று வைத்துக் கொண்டபோதிலும், அதற்காக டாக்டர் கான்சாகிப் மந்திரி சபை அமைக்கும் அவசியம் என்ன வந்தது? வங்காளத்தில் பாருங்கள்! அங்கேயும் நாஸிமுடீன் கானின் முஸ்லிம் லீக் மந்திரி சபை நடந்தது. அந்த மந்திரி சபைக்குச் சட்டசபையில் தோல்வி ஏற்பட்டது. ஏற்பட்டதும் என்ன நடந்தது? 93-ம் பிரிவு ஆட்சி வந்து விட்டதோ, இல்லையோ? அதுபோலவே, எல்லைப்

புறத்திலும், அவுரங்கஜீப் கானின் அழகான மந்திரி சபையைத் தோற்கடித்து விட்டு டாக்டர் கான்சாகிபு சும்மா யிருந்தால், தானே 93-ம் பிரிவின் ஆட்சி ஏற்பட்டு விட்டுப் போகிறது? இவர் எதற்காகப் போய் மந்திரி சபை அமைக்க வேண்டும்?

"விசேஷ நிலைமை" என்று சொல்வது அர்த்தமில்லாத அபத்தம். எல்லைப் புறத்திலே நடந்துவிட்டது போல் மற்ற மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்டு விடுவதைக் கர்னல் அமெரி விரும்பவில்லை; அதனால் அவர் 'விசேஷ நிலைமை' என்று சொல்கிறார்! நம்மவர்களில் சிலரும் அதே பாடத்தைப் படிக்கிறார்கள்! அமெரியின் மனமார்ந்த விருப்பம் காங்கிரஸ் சங்கத் தீவிர வாதிகளால் நிறைவேற வேண்டுமென்று ஏற்பட்டிருக்கிறதே!

## தலைவர்கள் விடுதலை

ஸ்ரீ நாகின்தாஸ் மாஸ்டர் இன்னொரு விஷயம் கூறினார்:—"சிறையில் உள்ள காங்கிரஸ் தலைவர்கள் ரொம்பப் பெரியவர்கள்; வெளியிலே உள்ள நாம் ரொம்பச் சின்னவர்கள். அவர்களை விடுதலை செய்வதற்காக நாம் மந்திரி வேலை ஒப்புக் கொள்வதாவது? சிறையிலுள்ள தலைவர்களுக்கு இது திருப்தியளிக்காது!" என்றார். இன்னும் சிலர் "சிறையிலுள்ள தலைவர்களை இது அவமானப் படுத்துவதாகும்!" என்றும், "நன்றியற்ற செய்கை!" என்றும் சொல்கிறார்கள். கான் அப்துல் கபூர் கானை டாக்டர் கான்சாகிபு விடுதலை செய்ததால், கபூர்கான் அவமானப் பட்டுத் தலை குனிந்து ஒளிந்து கொண்டிருக்கவில்லை. திவ்யமாய் வெளியில் வந்து ஊர் ஊராய்ப் பிரயாணம் செய்து கொண்டுதானிருக்கிறார்.

அதோடு, "எல்லைப்புற மாகாணத்தில் நாங்கள் அஹிம்சையுடனிருந்தோம்; அதனால் ஜயித்தோம். மற்ற மாகாணங்களில் அஹிம்சா தர்மத்தைக் கைவிட்டீர்கள். அதனால் தோற்றீர்கள்!" என்றும் சொல்லிக்கொண்டு போகிறார். சிறையிலுள்ள பெரியவர்களை அப்படியே சிறையில் இருக்கட்டும் என்று விட்டு விட்டு, வெளியில் நாம் நாற்பது கோடி ஜனங்களும் உண்டு உடுத்துக் களித்தும் மேயர் உத்தியோகம் முதலிய காரியங்களைப் பார்த்துக் கொண்டும் இருப்பதுதான் கௌரவமான காரியமா? இது யாருக்குக் கௌரவமான காரியம்? சிறையிலுள்ள தலைவர்கள் பெரியவர்கள்தான்! ஆனால் அவர்கள் பெரியவர்கள் என்பதற்காக, நாம் இந்தச் சந்தர்ப்பத்தில் நமக்குச் சரியென்று தோன்றும் காரியத்தைச் செய்யாமல் கையைக் கட்டிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்க வேண்டுமென்று அந்தப் பெரியவர்கள் ஒருகாலும் சொல்ல மாட்டார்கள்!

மேலும் சிறையிலுள்ள பெரியவர்களுடைய கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காக வெளியில் உள்ள சின்னவர்களாகிய நாம் ஒன்றும் செய்யாமலிருக்க வேண்டும் என்றும் அவர்கள் எதிர்பார்க்க மாட்டார்கள்.

அவர்களுடைய விடுதலைக்கு நம்முடைய உதவி தேவையில்லையென்றால் அவர்களுடைய கௌரவத்தைக் காப்பதற்கும் நம்முடைய உதவி நிச்சயமாகத் தேவையில்லையல்லவா?

## கல்வி தர்மம்

பம்பாய் மாநகரில் மட்டுங்கா என்னும் பகுதிக்கு ஒருவர் புதிதாகப் போனால், மயிலாப்பூர் அல்லது தியாகராஜ நகரில் இருப்பதாக நினைத்துக் கொள்வார். பம்பாயில் தற்சமயம் தென்னிந்தியர்கள் அவ்வளவு ஆயிரக் கணக்கானவர்கள் வசிக்கிறார்கள். அவர்களுடைய குழந்தைகள் கல்வி கற்பதற்குத் தமிழ்-தெலுங்கு போதிக்கப்படும் பள்ளிக்கூடம் ஒன்று வேண்டுமல்லவா? அத்தகைய உயர்தரப் பள்ளிக்கூடம் ஒன்றைத் தென்னிந்தியக் கல்விக் கழகத்தார் மிகச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். சுமார் 900 பிள்ளைகளும் 800 பெண்களும் படிக்கிறார்கள். இத்தகைய கல்வி ஸ்தாபனத்துக்கு மற்ற எல்லாச் சிறப்புக்களும் இருந்தும் பொருளாதாரச் சிறப்பு மட்டும் ஏற்படவில்லை. சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய் கடன் வாங்கிப் பள்ளிக்கூடக் கட்டிடம் கட்டியதில், கடன் இன்னும் அரை லட்சத்துக்குமேல் பாக்கியிருக்கிறதாம். பணப் பெருக்கம் அதிகமாயிருக்கும் இந்த நாளில் மேற்படி கடனைத் தீர்க்காவிட்டால் பிறகு எப்போது தீர்க்க முடியும்? எனவே, மேற்படி கைங்கரியத்துக்கு நிதி சேர்க்கும் பொருட்டு பம்பாய்த் தென்னிந்தியர்கள் பே மீ 5உ ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் கச்சேரியை ஏற்படுத்தியிருக்கிறார்கள். கச்சேரிக்குப் பிரமாத ஏற்பாடுகள் நடந்திருப்பதாக அறிகிறோம். சங்கீத ரஸிகர்கள் நிறைந்த பம்பாய்—மட்டுங்காவில் எம். எஸ். ஸின் கச்சேரி பேஷாக அமையும் என்பதில் ஐயமில்லை. இந்தக் கச்சேரியோடு மேற்படி பள்ளிக்கூடக் கடனும் அடியோடு தீர்ந்து விட்டால் ரொம்ப ரொம்ப பேஷாயிருக்கும்!

---

சென்ற இதழில் வெளியான கார்ட்டூனுக்குப் பரிசு பெற்றவர்: என். நாராயணன், 21, ஆண்டார் தெரு, தெப்பக்குளம் போஸ்டு, திருச்சி.

ஸான்பிரான்ஸிஸ்கோ மாநகரில் நாளது ஏப்ரல் 25உ நாற்பத்தாறு

மகாநாட்டில் முப்பெரும் தலைவர்களான ஸ்டாலின், ட்ருமன், சர்ச்சில் ஆகியவர்கள் கலந்துகொள்ள வில்லையானாலும் உண்மையாக மறைவிலிருந்து மகாநாட்டை நடத்திவைக்கிறவர்கள் அவர்கள்தான் என்பது தெரிந்த விஷயமே.

ஸான்பிரான்ஸிஸ்கோ மகாநாடு

சமாதானம்





"ஸான்பிரான்ஸிஸ்கோ மகாநாட்டில் எழுப்பப்போகும் சமாதானத் திரைக்குப் பின்னால் யுத்தத்துக்குக் காரணமான பீதியும், அவநம்பிக்கையும் ஒளிந்து கொண்டிருக்கும் என்பது காந்திஜியின் வாக்கு.

நேசதேசப் பிரதிநிதிகள் கொண்ட மகாநாடு கூடிற்று. —உம்மன்




உலகில் யுத்தப் பிரச்னையைத் தீர்த்துச் சமாதானத்தை நிலைநாட்டுவதற்காகக் கூடியிருக்கும் இம் மகாநாடு, அதுவே ஒருபெரிய போராட்டத்தின் அரங்கமாகலாம் என்று கருதப்படுகிறது.

சிற்றரசுகள்

வல்லரசுகள்

# ஜனசக்தி விஜயம்

அதிசயத்தி லெல்லாம் அதிசயம்; உலகம் கண்டிராத மகா அதிசயம். ஆனால், அதில் அதிசயம் ஒன்றுமில்லை.

அது என்ன?

இப்படி ஒரு பிதிர் போடக்கூடிய அபூர்வ சம்பவம், மகத்தான உலக சரித்திர சம்பவம், சென்ற வாரத்தில் நிகழ்ந்திருக்கிறது.

அது என்ன சம்பவம்?

ருஷியாவின் செஞ்சேனை நெருப்பு மழை பொழிந்து கொண்டு பெர்லின்மா நகரில் பிரவேசித்த சம்பவம்தான். சோவியத்தின் வீரப் படைகள் வெற்றி முழக்கத்துடன் பெர்லினை நாலாபுறமும் சூழ்ந்து கொண்டிருக்கும் சம்பவந்தான். உலகத்தின் மூன்றாவது மாபெரும் நகரம் இன்று தவிடு பொடியாகிக் கொண்டிருக்கும் சம்பவந்தான்.

* * *

இது அதிசயத்தி லெல்லாம் அதிசயம் என்பது எப்படி?

சொல்கிறோம்:

உலகிலேயே இராணுவத் திறமையிலும், இராணுவ தந்திரத்திலும், விஞ்ஞான முன்னேற்றத்திலும், இயந்திரப் பயிற்சியிலும், கட்டுப்பாட்டிலும், தேக வலிமையிலும், அறிவின் பலத்திலும் இணையற்ற தேசம் ஜெர்மனி தேசம். சென்ற நூறு வருஷத்துக்குள்ளாக அந்த நாட்டில் அன்னிய சைன்யங்கள் பிரவேசித்ததில்லை. சென்ற உலக யுத்தம் முடிந்ததிலிருந்து அந்நாட்டின் இராஜ தந்திரிகளும் இராணுவ தந்திரிகளும் அடுத்த யுத்தத்துக்கு ஆயத்தம் செய்து கொண்டு வந்தார்கள். புதிய புதிய யுத்த ஆயுதங்களையும் யுத்த முறைகளையும் கண்டு பிடித்து வந்தார்கள். அவர்களுக்குச் சௌகரியமான காலம் பார்த்து அவர்களே இந்த யுத்தத்தை ஆரம்பித்தார்கள். இரு முனைகளில் யுத்தம் ஏற்படக் கூடாதென்பதற்காக மேற்கே பிரான்ஸை முதலில் அடியோடு தீர்த்துவிட்டு அப்புறம் திடீரென்று திரும்பி நம்பிக்கைத் துரோகம் செய்து ருஷியாவை மூர்த்தண்யமாகத் தாக்கினார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக, ஜெர்மானியருக்கு மிக அதிசயமான மனோசக்தியும் சொல் திறமையும் ஒழுக்கமும் உள்ள ஒரு தலைவர் கிடைத்திருந்தார். ஹிட்லரைத்தான் சொல்கிறோம். சுருட்டுக் குடிக்காதவர்; மதுபானம் செய்யாதவர்; *சிற்றின்பத்தை நாடாதவர்; சுயநலம் இல்லாதவர் லட்சக் கணக்கான ஜனங்களுக்குத் தம்முடைய ஆத்மீக சக்தியை ஊட்டி வெறி கொள்ளும்படி செய்யக் கூடியவர். லட்சக் கணக்கான ஜனங்களைத் தங்கள் உடல் பொருள் ஆவிகளைத் தத்தம் செய்யும்படி தூண்டக்கூடிய விசேஷ மானஸீக காந்த சக்தி படைத்தவர்.

அப்படிப்பட்ட தலைவரின் கீழே, பரம்பரையாக நூற்றுக்கணக்கான வருஷங்களாக யுத்த தந்திரங்களில் நிபுணத்வம் பெற்ற மகா தளபதிகள் ஜெர்மன் சைன்யத்துக்குத் தலைமை வகித்து யுத்தம் நடத்தினார்கள்.

இங்கே, ருஷியா தேசமோ, சென்ற இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னால் ஐரோப்பாவிற்குள்ளே மிகவும் பிற்போக்கான தேசமாயிருந்தது. சென்ற நூறு வருஷத்தில் எத்தனையோ யுத்தங்களில் ஈடுபட்டிருந்த போதிலும் ஒவ்வொன்றிலும் தோல்வியடைந்து கொண்டே வந்தது. உலகத்திலேயே கண்டிராத கொடுங்கோலனாகிய ஜார் சக்கரவர்த்தியின் கீழ் பேச்சு சுதந்திரம், எழுத்து சுதந்திரம், கூட்டம் கூடும் சுதந்திரம் ஒன்றுமில்லாமல் ஜனங்கள் வாழ்ந்து வந்தார்கள். பஞ்சமும் பட்டினியும் அவர்களைப் பிடுங்கித் தின்றன. எழுதப் படிக்கத் தெரியாத நிரட்சர குட்சிகள் இந்தியாவைக் காட்டிலும் ருஷியாவில் அதிகமாயிருந்தார்கள். இயந்திரப் பயிற்சியிலும் இந்தியாவைப் போல்தான் மிகப் பின்னால் இருந்தார்கள். ருஷிய சைன்யத்தைப்

---

* "ஹிட்லர் இரண்டு வாரத்துக்கு முன் கல்யாணம் செய்து கொண்டார்" என்பது போன்ற ஆபாசப் பிரசாரப் பொய்க் கூற்றுக்களை நாம் நம்பவில்லை.

போல் திறமையற்ற கட்டுப்பாடில்லாத சைன்யம் ஐரோப்பாவில் வேறெந்த தேசத்திலும் இருந்தது கிடையாது.

இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னால் மேற்படி நிலைமை. இன்றைக்கு அதே ருஷிய நாட்டுச் சைன்யங்கள் இரண்டாயிரம் மைல் தூரம் பகைவர்களைத் துரத்தி யடித்துக் கொண்டு வந்த பிறகு, ஜெர்மனியின் தலை நகரில் பிரவேசித்திருக்கின்றன!

இனிமேல் அமெரிக்க — பிரிட்டிஷ் படைகள் பெர்லினில் பிரவேசிப்பது கூடச் சாத்தியமில்லாதபடி நகரை நாலா புறமும் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. வீதி வீதியாகவும் வீடு வீடாகவும் ஆகாச மார்க்கத்திலும் பாதாள வழிகளிலும் வீரப் போர் புரிந்து உலகத்தில் இணையற்ற வலிமை வாய்ந்த நாஜிகளை நிர்மூலம் செய்து வருகின்றன.

இது அதிசயம் அல்லவா? மகத்தான அதிசயம் அல்லவா?

உலக சரித்திரத்தில் இதற்கு முன்னால் எந்தக் காலத்திலும் இத்தகைய அதிசயம் நிகழ்ந்தது கிடையாது.

* * *

சரி; அதிசயந்தான். ஆனால், அதிசயம் இல்லவும் இல்லை!

அது எப்படி?

சொல்கிறோம்:

சாதாரணமாக, உலகில் எதிர்பாராத சம்பவம் நடந்தால்தான் அதிசயம் என்று சொல்வது வழக்கம்.

எதிர்பார்க்கும் சம்பவம் எதுவும் அதிசயமாகாது.

செஞ்சேனையின் இந்த மகத்தான வெற்றி பலரால் எதிர்பார்க்கப்பட்ட வெற்றியே யாகும்.

சென்ற இருபத்தைந்து ஆண்டு காலத்தில் உலக நிகழ்ச்சிகளைக் கற்பனா சக்தியுடன் கவனித்து வந்திருப்பவர்கள் எதிர்பார்த்த காரியமேயாகும்.

ருஷியாவில் திரண்டு எழுந்து வந்த ஜன சக்தியையும், அதை அந்நாட்டில் உருப்படுத்தி அமைத்துவந்த முறையையும் சிறிதேனும் அறிந்து கொண்டவர்கள் ஐயமற எதிர்பார்த்ததே யாகும்.

யார் எதிர்பார்த்தாலும் எதிர்பார்க்காவிட்டாலும் நாம் நிச்சயமாக எதிர்பார்த்தோம். இரண்டும் இரண்டும் நாலு என்பது எவ்வளவு உறுதியோ, அவ்வளவு உறுதியாக ருஷியாவின் வெற்றியை நாம் எதிர்பார்த்தோம்.

ஆரம்பத்திலேயே எதிர்பார்த்தோம். அதனாலேதான், ருஷியா யுத்தத்தில் சேர்ந்ததும், "யுத்தத்தின் போக்கு மாறி விட்டது; ஆகையால் நமது யுத்தக் கொள்கையை மாற்றிக் கொள்ள வேண்டும்" என்று சொன்னோம். அதன் மூலம் பலருடைய அர்த்தமற்ற கோபத்துக்கு ஆளானோம்.

ஜெர்மன் படைகள் மாஸ்கோவை நோக்கி அதி வேகமாக முன்னேறிச் சென்றபோதும், முடிவில் ருஷியாதான் ஜெயிக்கப் போகிறதென்று நாம் நிச்சயமாக எதிர்பார்த்தோம்.

அர்மாதிரியே மூன்று வருஷத்து யுத்தத்துக்குப் பிறகு ருஷியப் படைகள் ஜெர்மன் எல்லைக்கு வந்து தடைப்பட்டு நின்றபோதும், ஜெர்மனியின் ஒன்று முதல் பன்னிரண்டு வரையுள்ள வி' குண்டுகளைப் பற்றிச் செய்திகள் வந்து கொண்டிருந்த போதும், ருஷியாவின் முடிவான வெற்றியில் நமது நம்பிக்கை குன்றவில்லை.

ஜெர்மனியின் மேற்கு எல்லையில் பிரிட்டிஷ் - அமெரிக்கப் படைகளும், கிழக்கு எல்லையில் ருஷிய செஞ்சேனையும் முன்னேறத் தயாராய் நின்றபோது, முதலில் பெர்லினை அடையப் போவது செஞ்சேனைதான் என்று உறுதி கூறினோம்.

பெர்லினுக்கு முப்பத்தாறு மைல் தூரத்தில் ஓடர் நதிக்கரையில் தளபதி ஸுகாவ் கூடாரம் அடித்துக்கொண்டு தங்கியபோது, அடுத்த பெரும் பாய்ச்சலுக்கு அவர் தயார் செய்துகொண்டிருக்கிறார் என்று எதிர்பார்த்தோம்.

எந்த வாரத்தில் ருஷிய சேனை பெர்லினை அடையும் என்று நாம் எதிர்பார்த்து, அட்டைப் படத்தில் பெர்லினையும் ஹிட்லரையும் போடத் தீர்மானித்திருந்தோமோ, அதே வாரத்தில் அதே தேதியில் செஞ்சேனை பெர்லினுக்குள் பிரவேசித்த செய்தி வந்தது!

இப்படியெல்லாம் ருஷியாவின் வெற்றியை நாம் நிச்சயமாக எதிர்பார்த்தது, நம்முடைய அபார தீர்க்க திருஷ்டியினால் என்று நாம் சொல்லவில்லை. அதைத் தம்பட்டம் அடித்துக் கொள்வதற்காகவும் இதையெல்லாம் நாம் எழுதவில்லை.

ருஷியாவின் வெற்றியில் நமக்கு அவ்வளவு உறுதி ஏற்பட்டதின் காரணம், சென்ற இருபத்தைந்து வருஷத்தில் ருஷியாவில் திரண்டு எழுந்து வந்த புதிய ஜனசக்தியில் நமக்கு ஏற்பட்டிருந்த நம்பிக்கையே யாகும்.

அந்த ஜன சக்தியை நாம் நம்பியது வீண் போகவில்லையென்பதைச் சுட்டிக் காட்டுவதற்காகவே மேலே கண்ட பழைய கதையை ஞாபகப்படுத்தினோம்.

ருஷியாவும் ஜெர்மனியும் இந்தியாவிலிருந்து எத்தனையோ ஆயிரம் மைல் தூரத்துக்கப்பால் இருக்கின்றன. எனினும், ஜெர்மனியின் மீது ருஷியா வெற்றி கொண்டதன் பொருட்டு நாம் அளவற்ற மகிழ்ச்சி கொள்கிறோம்.

ஏனெனில், மேற்படி வெற்றியில் கேவலம் ருஷியா தேசத்தின் வெற்றியும் ஜெர்மனியின் தோல்வியும் மட்டும் அடங்கியிருக்கவில்லை.

ருஷ்யாவின் வெற்றியானது, வெறும் இராணுவ மிருக பலத்தின் மீது புத்துயிர் பெற்ற ஜனசக்தி கொண்ட வெற்றியாகும்.

ஆகையால், அந்த வெற்றியைக் குறித்து ஆனந்தப்படவும் மகிழ்ச்சி கொண்டாடவும் நமக்குப் பாத்தியதை உண்டு.

பிரிட்டிஷ் — அமெரிக்கப் படைகள் முதலில் பெர்லினில் பிரவேசித்திருந்தால் நாம் இவ்வளவு ஆனந்தமடையக் காரணம் இருந்திராது.

ஏனென்றால், அந்த வெற்றி ஒரு இராணுவ சக்தியின் மீது இன்னொரு இராணுவ சக்தி அடைந்த வெற்றியாகவே இருந்திருக்கும்.

ருஷியா அடைந்துள்ள வெற்றியோ அத்தகையதல்ல.

இந்த வெற்றியின் இராணுவ ஆற்றலும் இயந்திர ஆயுதங்களும் பெரும் பங்கு எடுத்துக் கொண்ட போதிலும், இவையெல்லாம் இரண்டாந்தரக் காரணங்களேயாகும்.

முதன்மையான காரணம், ருஷியாவின் பாமர ஜனங்கள் திரண்டெழுந்து, இருபது கோடி மக்கள் ஒரே மனிதரைப் போன்ற ஒற்றுமையும் மன உறுதியும் கொண்டு, "பகைவர்களை ஒழிப்போம்; தாய் நாட்டைக் காப்பாற்றுவோம்" என்று கிளம்பியதுதான். அத்தகைய மன உறுதியையும் ஒருமைப்பாட்டையும் ருஷியர்களுக்கு அளித்தது, ருஷியாவில் உதயமாகி நிலைபெற்றிருக்கும்,

"நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்னும் புது உலக ஆதர்சமேயாகும்.

எனவே, ருஷியாவின் வெற்றி, புது உலக ஆதர்சத்தின் வெற்றி; புதிய ஜனசக்தியின் வெற்றி.

அந்த வெற்றி நம் எல்லாருக்கும் பொதுவான வெற்றி. எல்லாரும் ஆனந்தப்பட வேண்டிய வெற்றி.

இன்று ருஷியாவில் வெற்றியடைந்த ஜனசக்தியானது, நாளை சீன நாட்டில் வெற்றியடையும். அதற்கு மறுநாள் இந்தியாவிலும் வெற்றியடையும்.

பின்னொரு நாள் உலகம் முழுவதிலும் வெற்றியடையலாம்.

இத்தகைய நம்பிக்கையுடனேதான் ருஷிய ஜனசக்தியின் வெற்றியை நாம் கொண்டாடுகிறோம்.

நம்முடைய கொண்டாட்டத்தின் சின்னமாக அடுத்த "கல்கி" இதழை ருஷிய வெற்றி மலராகக் கொண்டு வரவும் தீர்மானித்திருக்கிறோம்.

# ஆகாச வெடி

"நேற்று காந்திஜி ஸ்ரீ என். ஆர். சர்க்காருடன் 20 நிமிஷ நேரம் பேசிக் கொண்டிருந்தார்." —ஒரு செய்தி.

என். ஆர். சர்க்கார்தானே? இந்திய சர்க்கார் அல்லவே?

★

"இத்தாலியில் போ நதிக்கு அருகில் சண்டையிட்டுக் கொண்டிருந்த ஐந்தாவது ஜெர்மன் சைன்யங்கள் இப்போது எங்கே போயின என்று தெரியவில்லை"

—ஒரு செய்தி.

ஜெர்மன் சைன்யங்கள் போனதிக்குத் தெரியாமல் போய்விட்டன போலும்.

★

'ஸான் பிரான்ஸிஸ்கோ மகாநாட்டில் இந்தியாவின் வோட்டு என்பது பிரிட்டனின் வோட்டாகவே இருக்குமா?' என்று கேட்டதற்கு 'அது உண்மையல்ல' என்று ஆட்லி கூறினார்.

—ஒரு செய்தி.

வாஸ்தவம்; இந்தியாவின் வோட்டு உண்மையான வோட்டு அல்ல என்று கூறுவது முற்றிலும் உண்மை!

★

"இத்தாலியிலுள்ள அர்ஜெண்டா நகரை நேசதேசப் படைகள் வெகு வேகமாகச் சென்று கைப்பற்றின." —ஒரு செய்தி.

அர்ஜெண்டா நகரைப் பிடிப்பதற்கு அவசரப்பட்டால்தானே முடியும்!

★

"ஹோம் மெம்பர் ஸர் பிரான்ஸிஸ் மூடி லண்டனுக்குச் சென்ற விஷயம் ரகசியமாகவே இருக்கிறது." —ஒரு செய்தி.

மூடிச் சென்ற விஷயம் ரகசியமாய்த் தானே இருக்க முடியும்?

# வான சஞ்சாரம்

இசைத்தேனீ

சென்ற வார ரேடியோக் கச்சேரிகளில் 23வ. இரவு திருச்சி நிலையத்தில் நடந்த தஞ்சாவூர் லக்ஷ்மீநாராயணனதே முதன்மையான தென்பதை ரஸிகர்கள் எளிதில் அறிந்திருப்பார்கள். சாரீர சம்பத்துடன் அழகு பாணியும் கொண்டு சங்கீத மேடையில் வேகமாயும் கனமாயும் முன்னணிக்கு வந்திருப்பவர். கனிப்பான அவர் குரல் அன்று விசேஷத் தெளிவும் ரஞ்சகமும் கொண்டிருந்தது. எடுத்ததும் காம்போதி ராகம் கம்பீரமாய்க் காதில் விழுந்தது. கல்யாணியில் பாணியழகு மனம் கவர்ந்தது. ஸிம்மேந்திர மத்யமம் விரிவாயும் எல்லாவற்றையும் விடச் சிறப்பாயுமிருந்ததோடு அதில் பாடிய 'சரவணபவகுக ஷண்முகனே' என்ற பல்லவியும் வெகு சொகுசாயிருந்தது. 'இதய வெளியினிலே' உருப்படியில் நிரவல், பாவம் பொருந்தியிருந்தது. 'சேவிக்க வேண்டுமய்யா' என்ற உருப்படி அவரிடம் சாதாரணமாய் எதிர்பார்க்காத சௌக்கமும் நிதானமும் கொண்டு உருக்கமாயிருந்தது. ஆனால் 'ஸாமஜ வரகமன' கிருதியில் பல்லவியின் சாஹித்திய உச்சரிப்பு கொஞ்சம் சந்தேகத்துக்கு இடம் கொடுத்தது.

அடுத்தாற் போல் 18வ. திருச்சியில் கேட்ட ஈரோடு விச்வநாதய்யரின் வயலின் கச்சேரியே சிறந்த தெனலாம். ஞானபாவத்துடன் நல்ல அனுபவம் வாய்ந்த வித்வான். அன்று அவர் வாத்தியம் நிதானமும், அழுத்தமும் கொண்டு கமக இழைப்புகளோடு வனப்புடன் விளங்கியது. ஆபோகி, மாயாமாளவ கௌளை, ஸிம்மேந்திர மத்யம ராகங்கள் களைமிகுந்து இலங்கின. உருப்படிகளும் தேர்ந்தியா யிருந்ததோடு அவைகளின் கண்ட ஸ்வரப்ரஸ்தாரங்கள் விருவிருப்பாயிருந்தன.

24வ. சென்னையில் ஏமனி சங்கர சாஸ்திரியின் வீணைக்குப் பதிலாக ஸ்ரீ டி. கே. ராதாகிருஷ்ணன் வேணுகானம் செய்து மகிழ்வித்தார். இந்த வாத்தியத்தில் நல்ல தேர்ச்சியுடன் முன்னணிக்கு வந்துகொண்டிருக்கிறார். ராகங்களின் கற்பனையும் ஸ்வரப்ரஸ்தாரங்களில் ஞானபாவ வேலைப்பாடுகளும் தென்பட்டன. எல்லாவற்றிலும் அன்று அவர் கையாண்டவாறு மிகச் சிறப்பாயிருந்தது.

18வ. சென்னையில் கேட்ட என். ஏ. சுந்தரத்தின் பாட்டு கவனத்தை யிழுத்தது. மெல்லிய குரல். சாதாரண கிருதிகளைவிட அபிநயத்துக்கான பதங்களே அவரிடம் அதிகம் சோபிப்பதுபோல் அவர் பாடிய 'பையதா' உருப்படியி லிருந்து தோன்றிற்று. வானொலியில் காணும் புரோகிராமும் பேருக்குத்தான் அச்சிட்டிருந்தது போலும்!

19வ. சென்னையில் பாடிய கங்காபாய் சுப்ரமணியனுக்கு நல்ல சாரீரம்; சாதக முறையும் போற்றத்தக்கது. அனுபவித்துப் பாடுகிறார். அன்று, விஜயநாகரி, காம்போதி, பந்துவராளி ராகங்களை நன்கு கையாண்டார். பைரவியில் திறமை முழுவதையும் காட்டினார். உருப்படிகளும் கச்சிதமா யிருந்தன.

# வட்ட மேஜை

சிம்லா,
20—4—45.

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

எங்கள் சபையின் ஆதரவில் 19—4—45 மாலை 6-மணி முதல் 9-45 வரை ஸ்ரீ டி. கே. ராதாகிருஷ்ணன் புல்லாங்குழல் கச்சேரி நடைபெற்றது. சபையோர்கள் கானத்தில் மெய் மறந்திருந்தார்கள். வெகு அற்புதமான வாசிப்பு. சிறந்த பாணி. இவர் சகோதரர் ஸ்ரீ டி. கே. ராமச்சந்திரனின் பிடில் குழலுடன் இழைந்து சோபித்தது. கஜேந்திரம் கிருஷ்ணன் மிருதங்கமும் நன்றாயிருந்தது.

குறிப்பாக ஸ்ரீரஞ்சனி கல்யாணி ராகங்களில் பாடிய கீர்த்தனங்களும், தோடி பல்லவி, பிறகு ராகமாலிகையில் அடாணா, கானடா, சஹானா முதலியவைகளும், புன்னாகவராளியில் 'ஆடு பாம்பே' பாட்டும் ஒன்றை யொன்று தூக்கி யடிப்பதாக இருந்தன. இரண்டு மூன்று துக்கடாப் பாட்டுக்களுடன் கச்சேரியை இனிதாக முடித்தார். ஜனங்களின் மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது! ஒரே கரகோஷம்! ஹாஹாகாரம்!

வித்வான் மங்களம் வாசிக்க ஆரம்பித்த பொழுதே சபை கலைய ஆரம்பிக்காமல், புல்லாங்குழலைக் கீழே வைத்த பிறகுதான் சபை கலைந்தது. அடிக்கடி இவ்விடம் வந்து கான விருந்தளிக்க வேண்டுமென யாவரும் கேட்டுக் கொண்டார்கள். ஸ்ரீ ராதாகிருஷ்ணன் சந்தோஷமாக ஒப்புக்கொண்டார்.

அவர்போலவே மற்ற சங்கீத வித்வான்களும் ஸிம்லா வென்று பயப்படாமல், இங்கு அடிக்கடி வந்து எங்களை மகிழ்விப்பார்களென்று நம்புகிறேன். இப்படிக்கு,

டி. ராமையா,
உபதலைவர், கர்நாடக சங்கீத சபை.

பூனா,
21—4—45.

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

சென்ற 17, 18, 19-ம் தேதிகளில் பூனாத் தமிழர்கள் மகத்தான யோக சாலிகளானார்கள். காரணம், பம்பாய்த் தமிழர்களோடு போட்டி போட்டுக் கொண்டு நாங்களும் பூனாவில் 'கம்பர் விழா'க் கொண்டாடினோம். கம்பரின் தொண்டரான ஸ்ரீ பி. ஸ்ரீ. அவர்கள் எங்களூர் விழாவில் கலந்து கொண்டதால் அதனுடைய சோபை மிகுந்து தோன்றிற்று. கம்பன் நிர்மாணித்த கலைக்கோயிலும் அவனுடைய கவிதா சன்னதமும் பூனாத் தமிழர்களிடை ஒரு பரபரப்பை உண்டாக்கின. ஸ்ரீ பி. ஸ்ரீ. அவர்களுக்கு நாங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

எங்கள் கலைக்கழகம் பாலப் பருவத்திலிருக்கிறது. எல்லா விஷயங்களிலும் அதற்குத் தமிழ் நாட்டுப் பெரியார்களுடைய ஆசியும் உதவியும் தேவை.

நா. வெங்கடேசுவரன்,
காரியதரிசி, கலைக்கழகம்.

[வட நாட்டிலுள்ள தமிழர்களிடையே சங்கீதாபிமானம், தமிழ் இலக்கிய ஆர்வம் ஆகியவை அபரிமிதமாக வளர்ந்து வருகின்றன. இம்மாதிரி பல கடிதங்கள் வருகின்றன. எல்லாவற்றையும் பிரசுரிக்க முடியாததற்கு வருந்துகிறேன். ஆசிரியர்]

# பாரதியார் ஞாபகார்த்த நிதி

நமது அமரகவியின் ஞாபகார்த்தமாக மேற்படி நிதியை எந்த வேளையில் தொடங்கினேமோ, அது மிகவும் நல்ல வேளையாக அமைந்து, நாம் எதிர்பார்த்ததற்குப் பன் மடங்கு அதிகமாக நிதி வசூலான விவரம் நேயர்கள் அறிவார்கள்.

மேற்படி நிதி வசூலிக்கப்பட்டதின் நோக்கம், பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் அவருடைய ஞாபகார்த்த நிலையம் ஒன்று நிறுவுதல் ' என்பதும் நேயர்களுக்குத் தெரிந்த விஷயமே.

எட்டயபுரத்தில் அத்தகைய நிலையம் ஸ்தாபிப்பதற்குரிய பூர்வாங்க ஏற்பாடுகள் நடந்து வருகின்றன என்பதைத் தமிழ் மக்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். விவரங்களைக் கூடிய சீக்கிரத்தில் வெளியிடுதல் சாத்தியமாகுமென்று எதிர்பார்க்கிறேன். நிற்க:

திருநெல்வேலியில் கூடிய காங்கிரஸ் வாதிகளின் கூட்டத்தில், மேற்படி நிதியிலிருந்து பாரதியாரின் மனைவியாருக்கு உதவி செய்ய வேண்டுமென்று தீர்மானம் நிறைவேறியதைக் குறிப்பிட்டு, அதைப் பற்றித் தமிழ் மக்களின் அபிப்பிராயத்தைக் கேட்டிருந்தேன்.

அந்த யோசனையைப் பரிபூரணமாக ஆதரித்து நேயர்கள் அநேகரிடமிருந்து கடிதங்கள் வந்தன.

எட்டயபுரம் பாரதி இலக்கிய மன்றத்தார் 8-4-45-ல் மேற்படி மன்றத் தலைவர் ஸ்ரீ மு. கந்தசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் கூடிப் பின்வரும் தீர்மானத்தை நிறைவேற்றி அனுப்பி வைத்தார்கள் :—

"பாரதியாரின் மனைவியார் நிராதரவான நிலைமையில் இருப்பதாகவும் அந்த அம்மையாருக்குப் பாரதி நிதியின் வருமானத்திலிருந்து அவர்கள் ஆயுள்வரை உதவி செய்யவேண்டும் என்றும் 'கல்கி'யில் எழுதியிருந்ததை இக்கூட்டம் மனப்பூர்வமாக ஆதரிப்பதுடன், மேற்படி விஷயமாக சீக்கிரமே ஒரு ஏற்பாடு செய்யும்படியும் 'கல்கி' ஆசிரியர் அவர்களை இக் கூட்டம் கேட்டுக் கொள்கிறது."

பாரதியார் வாழ்க்கைத் துணைவிக்கு உதவி அளிப்பதற்கு விரோதமாக இதுவரை ஒருவராவது அபிப்பிராயம் தெரிவிக்கவில்லை.

இந் நிலைமையில், மேற்படி நிதியானது எந்த நோக்கத்துடன் வசூலிக்கப்பட்டதோ, அதற்கு முரண்பாடில்லாமல் பாரதியாரின் தர்ம பத்தினிக்கு எவ்விதம் அந்நிதியிலிருந்து உதவி செய்யலாமென்று நானும் "கல்கி" மானேஜரும் பல நண்பர்களுடன் கலந்து ஆலோசித்துப் பின்வரும் முடிவுக்கு வந்தோம்:

மேற்படி நிதியில் பத்தாயிரம் ரூபாயைத் தனிப்படுத்தி அதைப் பாங்கியில் நீடித்த தவணை டெபாஸிட்டாகப் போட்டு விடுவது. அந்தத் தொகையின் வட்டியைப் பாரதியார் மனைவியின் ஜீவியகாலம் வரை அவருக்குக் கொடுத்து வரவேண்டியது. பிற்பாடு, அந்தப் பத்தாயிரம் ரூபாயை எட்டயபுரம் பாரதி ஞாபகார்த்த நிலையத்தின் பராமரிப்புக்காக நிரந்தர நிதியாக ஏற்படுத்த வேண்டியது.

மேற்கண்ட யோசனையை நிறைவேற்றும் விஷயத்தில் இண்டோ கமர்ஷியல் பாங்கி மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ எஸ். என். சங்கரலிங்கய்யர் அவர்கள் செய்துள்ள உதவியை மிக்க நன்றியறிதலுடன் குறிப்பிட விரும்புகிறேன். இந்தக் காலத்தில், நீடித்த தவணை டெபாஸிட்டைப் பாங்கிகள் சாதாரணமாய் ஒப்புக் கொள்வதில்லை. ஒப்புக் கொண்டாலும் 100-க்கு 2 அல்லது 2½ விகிதத்துக்குமேல் வட்டி கொடுப்பதில்லை. ஸ்ரீ சங்கரலிங்கய்யர் அவர்கள் ஐந்து வருஷத்துக்கு டெபாஸிட் ஒப்புக்கொண்டதுடன் 100-க்கு 4½ வீதம் வட்டி கொடுக்கவும் ஒப்புக் கொண்டார்கள்.

மேற்படி வட்டி விகிதத்தின்படி பத்தாயிரம் ரூபாய்க்கு மாதம் ரூ. 37—8—0 வட்டி கிடைத்து வரும்.

மூன்று மாதத்துக் கொரு தடவை கூடுதலாகும் தொகை ரூ. 112—8—0 பாரதியாரின் மனைவி ஸ்ரீமதி செல்லம்மாள் அவர்களுக்கு பாங்கி நிர்வாகிகளால் நேரில் அனுப்பி வைக்கப்படும்.

மாதம் ரூ. 37—8—0 என்பது இந்த நாளில் மிகச் சிறு தொகையே யாயினும் தமிழ் மக்கள் தங்களுடைய குரு பத்தினிக்கு அளிக்கும் அன்புக் காணிக்கையாக அதை அங்கீகரிக்குமாறு ஸ்ரீமதி செல்லம்மாள் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

# சிவகாமியின் சபதம்






கல்கி

## பதினைந்தாம் அத்தியாயம்

## "நமனை அஞ்சோம்!"

வேலனின் காதலி நீலமயில் ஒன்றை வளர்த்து வருகிறாள். அந்த மயிலைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்கு முருகனுடைய நினைவு வருகிறது; காதலின் தாபம் அதிகமாகிறது. ஒரு நாள் மயிலைப் பார்த்துச் சொல்கிறாள்:—"நீ பெருமான் முருகனுடைய வாகனமல்லவா? போ! போய் அவரை இங்கு விரைவில் அழைத்து வா!" என்று கட்டளையிடுகிறாள். கட்டளையிடுவதுடன் நிற்காமல் மயிலை அடிப்பதாகப் பயமுறுத்தி விரட்டி விடுகிறாள். மயிலும் போய் விடுகிறது.

நீல மயில் விரைவில் திரும்பி வரும் என்றும், வரும்போது தன் மீது வேலனை ஏற்றிக்கொண்டு ஆடி வருமென்றும் காதலி வழி பார்த்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் மயிலையும் காண வில்லை; வேலனையும் காணவில்லை.

"வேலன் ஒரு வேளை அடியோடு தன்னை மறந்து விட்டிருப்பாரோ?" என்று ஒரு கணம் தோன்றுகிறது.

உடனே, அந்தப் பழைய சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது. கடைசித் தடவை வேலனை அவள் சந்தித்தபோது, "என்னை மறந்து விடக் கூடாது!" என்று தான் இரந்து கேட்டுக் கொண்டதும், அவர் தம் வேலின் மேல் ஆணையாக "உன்னை ஒரு நாளும் மறக்க மாட்டேன்!" என்று வாக்களித்ததும் நினைவுக்கு வருகிறது. உடனே, "இல்லை; அவர் ஒரு நாளும் மறந்திருக்க மாட்டார். இந்த மயில் தான் வீணாகத் தாமதம் செய்கிறது!" என்று தீர்மானித்துக் கொள்கிறாள்.

தன் மனக் கண்ணின் முன்னால் மயிலை உருவகப்படுத்தி நிறுத்திக் கொண்டு சொல்கிறாள்:—

"மறவேன் மறவேன் என்று
வேலின்மேல் ஆணையிட்ட
மன்னரும் மறப்பாரோ
நீல மயிலே!"

என்று சிவகாமி பாடிக் கொண்டு அபிநயமும் பிடித்தபோது, சபையோரின் கண் முன்னுலிருந்து சிவகாமி மறைந்து விட்டாள். தமிழகத்தின் அதி தெய்வமான ஸ்ரீ சுப்ரமண்யர் கையில் வேலுடனே அவர்கள் கண் முன்னுல் நின்றார். கருணையும் அன்பும் ததும்பிய கண்களினுல் முருகப் பெருமான் தன்னிடம் காதல் கொண்ட பெண்ணை நோக்குவதையும், கையில் பிடித்த வேலின் மேல் ஆணை வைப்பதையும், 'உன்னை என்றும் மறவேன்!' என்று உறுதி கூறுவதையும் சபையோர் பிரத்யட்சமாய்க் கண்டார்கள்.

அடுத்த கணத்தில் வேலனும் வேலும் மறைய, வேலனைப் பிரிந்த காதலியையும் நீலமயிலையும் சபையோர் தங்கள் எதிரே பார்த்தார்கள். காதலியின் உயிர் வேலனைப் பிரிந்திருக்கும் ஆற்ருமையினுல் உருகிக் கரைந்து ஓடுவதையும் அவர்கள் கண்டார்கள்.

"அன்பர் வரவுநோக்கி
இங்குநான் காத்திருக்க
அன்னநடை பயில்வாயோ
வன்ன மயிலே!"

என்னும் அடிக்குச் சிவகாமி அபிநயம் பிடித்த போது, முதலிலே, தன்னந்தனியான ஒரு பெண், கண்களில் அளவற்ற ஆசையுடனும் ஆர்வத்துடனும், முடிவில்லாமல் நீண்டு சென்ற வழியைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.

பிறகு, அந்தப் பெண், அன்ன நடை பயிலும் வன்ன மயிலைப் பரிகசிப்பதற்காகத் தானும் அன்ன நடை நடந்து காட்டியபோது, சபையில் 'கலீர்' என்ற சிரிப்பு உண்டாயிற்று. அவ்விதமே, முருகன் தன்னை வாகனமாய்க் கொண்ட பெருமிதத்தினுல் மயிலின் தலைக்கேறிய போதையைக் காட்டிய போதும், அதனுல் மயில் பாதையை மறந்து திண்டாடிய பேதைத்தனத்தைக் குறிப்பிட்ட போதும் சபையில் ஒரே குதூகலமாயிருந்தது.

"ஒரு வேளை என்மேல் பழி தீர்த்துக் கொள்வதற்காக வழியில் வேணுமென்று படுத்து உறங்கி விட்டாயோ?" என்று மயிலைப் பார்த்துக் கேட்டு விட்டு, அப்பேர்ப்பட்ட அநியாயத்தைச் செய்த மயிலை, "என்னமோ, நீ எப்படியாவது சௌக்யமாயிரு!" என்று மனங் கசந்து ஆசீர்வதிப்பதற்கு அறிகுறியாக, "வாழி நீ மயிலே!" என்று வாழ்த்தி, அதற்குரிய பாவமும் காட்டிய போது, அந்தச் சபையில் ஏற்பட்ட ஆரவாரத்தைச் சொல்லி முடியாது.

மறு கணத்தில் காதலியின் உள்ளப்பாடு மாறுகிறது. "தங்க மயிலே!" என்று கொஞ்சி அழைத்து, "இந்த மங்கை மீதிரங்க மாட்டாயா?" என்று கெஞ்சுகிருள். "உனக்காகவும் தெரியாது; சொன்னுலும் கேட்கமாட்டாய்! உன்னைக் குற்றம் சொல்லி என்ன பயன்? ஏ, வன்கண் மயிலே!" என்று, மயிலின் கொடுமையான கண்களின் சலனப் பார்வையைக் காட்டியபோது, சபையோர் அதிசயத்தில் மூழ்கினுர்கள்.

"உன்னை நொந்து பயனில்லை. உலகத்தில் யானைகள், குதிரைகள் என்பதாக எத்தனையோ நல்ல நல்ல பிராணிகள் இருக்க, உன்னைப் போய் வாகனமாய்ப் பிடித்தானே அவனையல்லவா நோகவேண்டும்?" என்று பாட்டை முடிக்கும்போது, அதில் அடங்கியிருந்த சோகம், மனக்கசப்பு, பரிகாசம், நகைச்சுவை ஆகிய உள்ளப்பாடுகள் அவ்வளவையும் சேர்த்தாற்போல் முகத்தில் கொண்டு வந்து காட்டிய சிவகாமியின் அற்புதக் கலைத்திறமையானது சபையோரைப் பரவசப்படுத்தியது.

ஆம்; மேற்கூறிய பாடலும் அபிநயமும் சபையில் எல்லோரையும் பரவசப்படுத்தத்தான் செய்தது;— ஒரே ஒருவரைத் தவிர. அந்த ஒருவர் மகேந்திர பல்லவர்தான். அவர் முகத்தில் சிணுக்கம் காணப்பட்டது. வேலனிடம் காதலை வெளியிடும் வியாஜத்தில் சிவகாமி மாமல்லரிடம் தன்னுடைய மனம் ஈடுபட்டதையும் தெரிவிக்கிருள் போலும்! 'வேலின்மேல்



ஆணையிட்ட மன்னர்' என்பதில் அடங்கிய சிலேடை மிகத் தெளிவாக மகேந்திரருக்கு விளங்கியது. 'தன்னிகரில்லாதான்' என்னும் போது சிவகாமி தம்மைப் பார்த்ததின் கருத்தையும் தெரிந்துகொண்டார். ஆகா! இந்தப் பெண்ணுக்குத்தான் என்ன தைரியம்? தம்மைத் தோத்திரம் செய்து அவளுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ள எண்ணுகிறாள் போலும்! ஆகா! மகேந்திர பல்லவனுடைய இயல்பை இவள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை!

இவ்விதம் எண்ணமிட்ட சக்கரவர்த்தி, அருகிலிருந்த ஏவலாளனிடம் ஏதோ சொல்லி அனுப்பினார். அவன் போய் ஆயனர் காதோடு ஏதோ கூறினான். ஆயனர் சிவகாமியிடம், "அம்மா! வாகீசப் பெருமானின் பதிகம் ஒன்று பாடு!" என்று கூறினார்.

* * *

ஏற்கெனவே, சக்கரவர்த்தியின் சிணுங்கிய முகத்திலிருந்து அவருடைய மனப்பாங்கைச் சிவகாமி ஒருவாறு தெரிந்துகொண்டிருந்தான். அவர் சொல்லி அனுப்பிய செய்தியினால் அது ஊர்ஜிதமாயிற்று. அந்தக் கல்நெஞ்சரைத் தன்னுடைய கலையின் மூலம் இளகச் செய்து அவருடைய ஆதரவைப் பெறலாம் என்று எண்ணிய தன்னுடைய பிசகை நினைக்க அவளுக்கு வெட்கமாயிருந்தது. அந்த வெட்கமே மறுகணம் கோபமாக மாறி அவள் உள்ளத்தில் கொந்தளித்தது.

"அப்படியா? நாவுக்கரசர் பாடல்தானே வேண்டும்? ஆகட்டும்!" என்று மனத்திற்குள் கருவிக்கொண்டு பின்வரும் பாடலை ஆரம்பித்தான்:—

"நாமார்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம்!......"

அதுவரையில் ஒரே ஆனந்தத்திலும் குதூகலத்திலும் ஆழ்ந்திருந்த அந்தச் சபையில் திடீரென்று ஒரு மாறுதல் உண்டாயிற்று. ஒரு கலியாண வைபவத்தின்போது, எதிர்பாராத அபசகுனம் ஏதேனும் ஏற்பட்டால் எல்லாருடைய மனமும் முகமும் எப்படி



மாறுமோ அப்படிப்பட்ட மாறுதல். இந்தப் பாட்டை இந்தச் சந்தர்ப்பத்தில் ஏன் பாடவேண்டும் என்று அத்தனை பேரும் எண்ணியதாக அவர்களுடைய முகக் குறியிலிருந்து தெரிந்தது.

மேற்படி பாடலின் சரித்திரம் அத்தகையதாகும். சமண சமயத்தை விட்டுச் சைவ சமயத்தைத் தழுவிய மருள்நீக்கியார் மீது பாடலிபுத்திரத்துச் சமணர்கள் பற்பல குற்றங்களைச் சுமத்திக் காஞ்சி பல்லவ சக்கரவர்த்திக்கு விண்ணப்பம் செய்து கொள்ள, மகேந்திர பல்லவர் உண்மையை விசாரித்து உணரும் பொருட்டு அவரைக் காஞ்சிக்கு வரும்படி கட்டளை அனுப்பினார். கட்டளையைக் கொண்டு போன இராஜாங்க தூதர்கள் அந்த மகா புருஷரைக் கொஞ்சம் விரட்டினார்கள்.

"எனக்கு இறைவன், சிவபெருமான் தான்; உங்களுடைய அரசன் கட்டளையை நான் மதியேன்!" என்று திருநாவுக்கரசர் கூறித் தூதர்களைத் திடுக்கிடச் செய்தார்.

"உம்மைச் சுண்ணாம்புக் காளவாயில் போடுவோம்; யானையின் காலால் மிதிக்கச் செய்வோம்; கழுத்திலே கல்லைக் கட்டிக் கடலிலே போடுவோம்" என்றெல்லாம் இராஜாங்க தூதர்கள் பயமுறுத்தினார்கள். அப்போது, மருள் நீக்கியார் ஒரு பாடலைப் பாடினார்:—

நாமார்க்குங் குடியல்லோம்
நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம்
நடலை யில்லோம்

ஏமாப்போம் பிணியறியோம்
பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந்
துன்ப மில்லை!

தாமார்க்குங் குடியல்லாத்
தன்மை யான
சங்கரனற் சங்கவெண்
குழையோர் காதிற்

கோமாற்கே நாமென்று
மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே
குறுகி னோமே!

மேற்கண்ட பாடலை ஓலையிலே எழுதுவித்து, "இதை எடுத்துக் கொண்டு போய் உங்கள் அரசரிடம் கொடுங்கள்" என்றார் சிவனடியார்.

தூதர்களும் தங்களுக்கு வேறு கட்டளை யில்லாமையால் திரும்பிச் சென்று பாடலைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்தார்கள். அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாகக் காரியம் நடந்தது. அதாவது பாடலைப் படித்த மகேந்தர பல்லவர் அத்தகைய தெய்வப் பாடலைப் பாடக்கூடிய மகானைத் தரிசிக்க விரும்பினார். அவரைத் தரிசித்த பிறகு, தாமும் ஜைன மதத்தைவிட்டுச் சைவ சமயத்தைச் சேர்ந்தார்.

இதெல்லாம் தெரிந்தவர்களானபடியாலேதான் சபையோர் அத்தகைய அஸ்வாரஸ்யத்தைக் காட்டினார்கள்.

ஆனால், சபையோருடைய மனோபாவத்துக்கு நேர்மாறாக இருந்தது மகேந்திர பல்லவருடைய மனோபாவம். அந்தப் பாடல் அவருக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்ததாகத் தெரிந்தது. பாடல் ஆரம்பித்த உடனே, அது எந்தச் சந்தர்ப்பத்தில் பாடப்பட்டதென்பதை மகேந்திரர் புலிகேசிக்கு அறிவித்தார். புலிகேசிக்கு அது எல்லையற்ற வியப்பையும் உவகையையும் அளித்ததாகத் தெரிந்தது. "அழகுதான்! தங்களுடைய அதிகாரத்தை மறுதளித்து ஒரு பரதேசி பாடல் பாடுவது; அதை ஒரு பெண் சபை நடுவில் நின்று அபிநயம் பிடிப்பது; அதை நீங்களும் பார்த்துச் சந்தோஷப்படுவது;— இதையெல்லாம் என்னால் நம்பவே முடியவில்லையே!" என்றார் வாதாபி சக்கரவர்த்தி.

"அதுதான் கலையின் மகிமை, சத்யாச்ரயா! ஒருவன் வாய்ப் பேச்சாக என் ஆக்ஞையை மறுத்திருந்தால், உடனே அவனைச் சிரச்சேதம் செய்யும்படி கட்டளையிட்டிருப்பேன். அதுவே செந்தமிழ்க் கவிதையாக வந்தபோது, 'இத்தகைய அற்புதக் கவிதையைப் பாடியவரைப் பார்க்க வேண்டும்' என்ற விருப்பம் எனக்கு உண்டாகிவிட்டது!" என்றார் ரஸிக சிகாமணியான காஞ்சி சக்கரவர்த்தி.

இதற்குள்ளாகப் பாடல் ஒரு தடவை பாடி முடிந்து, அபிநயமும் ஆரம்பமாகியிருந்தது. 'நமனை அஞ்சோம்' என்னும் பகுதிக்குச் சிவகாமி அபிநயம் பிடிக்கத் தொடங்கியிருந்தாள். அந்த அபிநயத்தின்போது மார்க்கண்டனுடைய கதை சபையோரின் கண் முன்னால் வந்தது.

* * *

மல்லிகைப் பூவின் மெல்லிய இதழ் போன்ற மிருதுவான சரீரத்தையுடைய அந்தப் பதினெட்டு வயது யுவதி, ஒரு கணத்தில் கையிலே தண்டாயுதத்துடனும் பாசக் கயிற்றுடனும் கண்டவர்கள் உயிர் குலையும் பயங்கரத் தோற்றத்துடன் வரும் யமதர்ம ராஜனாக மாறுகிறாள்! அடுத்த கணத்தில் அவளே பதினாறு வயதுள்ள இளம் பாலகனாக மாறி, முகத்தில் சொல்ல முடியாத பீதியுடன், சிவலிங்கத்தை அணைத்துக் கொண்டு உறுதியாக ஆலிங்கனம் செய்து கொள்கிறான்.

மறு கணத்தில் யமதர்ம ராஜன் தன் பாசக் கயிற்றை வீசி எறிந்து மார்க்கண்டனுடைய உயிரை வலிந்து கவரப் பார்க்கிறான். அந்த இளம் பிள்ளையின் முகமோ முன்னைக் காட்டிலும் பதின்மடங்கு பீதியையும் பரிதாபத்தையும் காட்டுகிறது.

ஆஹா! அடுத்த கணத்தில் அந்தச் சிவலிங்கத்திலிருந்து சம்ஹார ருத்ரமூர்த்தி கிளம்புகிறார்! சிவகாமியின் நெடிதுயர்ந்த ஆகிருதி இப்போது இன்னும் உயர்ந்து தோற்றமளிக்கிறது. ஒரு கணம், கருணை ததும்பிய கண்கள் சற்றுக் கீழ் நோக்கிப் பார்க்கின்றன. கரங்கள், பாலன் மார்க்கண்டனுக்கு அபயம் அளிக்கின்றன. மறு கணத்தில், கண்கள் எதிர்ப்புறம் நோக்குகின்றன. யமனைக் கோபத்துடனே பார்க்கும் அந்தக் கண்களில் அக்கினி ஜுவாலையைத் தத்ரூபமாய்க் காண்கிறோம். புருவங்களுக்கு மத்தியில், நெற்றிக் கண் இதோ திறந்துவிடப் போகிறது என்று நினைக்கும்படியாக, ஒரு துடி துடிப்புக் காணப்படுகிறது.

கோர பயங்கர முகமும் ஆகிருதியும் உடைய யமதர்மனிடம் இப்போது சிறிது பணிவு தோன்றுகிறது. "என் பேரில் ஏன் கோபம்? என்னுடைய கடமையைத்தானே செய்கிறேன்?" என்று சொல்லும் பாவம்.

மீண்டும் கோபம் கொண்ட சம்ஹார ருத்ரமூர்த்தி சபையோருக்குத் தரிசனம் தருகிறார். ஒரு காலைத் தூக்கி

ஓங்கி உதைக்கிருர். 'தடார்' என்ற சத்தத்துடன் கால் தரையில் வேகமாய்த் தாக்கிய போது, யமனே உதைபட்டுக் கீழே விழுவதுபோல் தோன்றுகிறது.

மீண்டும், பாலன் மார்க்கண்டனின் பால் வடியும் முகம். ஆகா! அந்த முகத்தில் இப்போது பயம் இல்லை, பீதி இல்லை! பக்தி பரவசமும் நன்றி உணர்ச்சியும் ததும்புகின்றன.

* * *

அபிநயம் ஆரம்பித்தவுடனேயே சபையோர் தங்களுடைய 'விரஸ' உணர்ச்சியை மறந்து விட்டார்கள். பாட்டு யார் பாடியது, எந்தச் சந்தர்ப்பத்தில் பாடியது என்பதெல்லாம் அவர்களுக்கு அடியோடு மறந்து போய் விட்டது. மார்க்கண்டன் கதையைக் கண் முன்னுல் பார்க்க ஆரம்பித்ததும், வெளி உலகத்தை மறந்து தங்களையும் அடியோடு மறந்து விட்டார்கள்.

பாடல் முழுவதற்கும் அபிநயம் பிடித்து முடியும் வரையில் சபையோர் அத்தகைய பரவச நிலையிலேயே இருந்தார்கள். இரண்டு சக்கரவர்த்திகளுங் கூடத்தான்.

பாடல் முழுதும் முடிந்து, பூலோகத்திற்கு வந்தவுடனே, "எப்படி?" என்று மகேந்திர பல்லவர் புலிகேசியைக் கேட்டார்.

"நாகநந்தி எழுதியது உண்மைதான்!" என்ருர் வாதாபி மன்னர். அவ்விதம் சொல்லிவிட்டு மகேந்திர பல்லவரை உற்று நோக்கினர். ஆனல் மகேந்திரரின் முகத்தில் எவ்வித மாறுதலும் காணப்படவில்லை.

"நாகநந்தி யார்? அவர் என்ன எழுதினர்?" என்று சாவதானமாக மகேந்திரர் கேட்டார்.

"நீங்கள் நாகநந்தி பெயரைக் கேள்விப் பட்டதே இல்லையா? தென்னுடெங்கும் பல நாள் யாத்திரை செய்த புத்த பிக்ஷு. அஜந்தா புத்த சங்கிராமத்தைச் சேர்ந்தவர்."

"பிக்ஷு என்ன எழுதி யிருந்தார் தங்களுக்கு?"

"அவருடைய யாத்திரை விவரங்களை எனக்கு அவ்வப்போது தெரிவிக்கும்படி கேட்டிருந்தேன். அந்தப் படியே எழுதி வந்தார். 'ஆயனரைப் போன்ற மகா சிற்பியோ, சிவகாமியைப் போன்ற நடன கலா வாணியோ இந்தப் பரத கண்டத்தில் வேறு எங்கும் இல்லை!' என்று ஒரு தடவை எழுதி யிருந்தார்."

"அப்படியா! நாகநந்தி பிக்ஷு நல்ல ரஸிகர் போலிருக்கிறது. அவர் இப்போது எங்கேயோ?"

"அதுதான் தெரியவில்லை. ஒருவேளை உங்களுக்குத் தெரிந்திருக்கலாமென்று நினைத்தேன்."

மகேந்திரர் மௌனமா யிருந்தார்.

"கண்ணில் பட்ட புத்த பிக்ஷுக்களையெல்லாம் ஒற்றர்கள் என்று நீங்கள் பிடித்துச் சிறைப்படுத்தியதாகக் கேள்விப்பட்டேன். ஒருவேளை நாகநந்தி பிக்ஷுவையும் ஒற்றர் என்று சந்தேகித்துச் சிறைப்படுத்தி விட்டீர்களோ, என்னவோ?"

இரண்டு சக்கரவர்த்திகளுக்குமிடையே மேற்குறித்த சம்பாஷணை நடந்துகொண்டிருக்கையில், சிவகாமியின் கண்கள், கரகோஷம் செய்து ஆரவாரித்துக் கொண்டிருந்த சபையோரின் மலர்ந்த முகங்களைப் பார்த்த வண்ணம் சுற்றி வந்து, மகேந்திர பல்லவரின் உற்சாகம் ததும்பும் முகத்தைப் பார்த்து விட்டு, அடுத்தாற்போல் வாதாபி சக்கரவர்த்தியின் கிளர்ச்சி கொண்ட முகத்திலே வந்து நின்றன.

அவ்விதம் நின்றதும், சிவகாமியின் உள்ளத்தில் இத்தனை நேரமும் படர்ந்து வேதனை செய்து கொண்டிருந்த மாயத் திரை டளிச்சென்று விலகிற்று. நிழலா யிருந்த ஞாபகம் தெளிந்த உரு வெடுத்து மனக் கண் முன்னுல் நின்றது. ஆ! அந்த முகம்! — அப்படியும் இருக்க முடியுமா? இரு மனிதர்களுக்குள் அத்தகைய முக ஒற்றுமை சாத்தியமா? அல்லது இருவரும் ஒருவர்தானு? மகேந்திர சக்கரவர்த்தி பலவித மாறுவேஷங்கள் போட்டுக் கொண்டு திரிவதுண்டு அல்லவா? அதுபோலவே, வாதாபி சக்கரவர்த்தியும் நாக நந்தி பிக்ஷுவாகத் தென்னுட்டில் உலாவிக் கொண்டிருந்தாரா? அப்படியானுல் அவருக்கும் மகேந்திர பல்லவருக்கும்

இத்தகைய சிநேகம் ஏற்பட்டிருக்க முடியுமா?

இத்தகைய எண்ணங்களினால் சிவகாமியின் உள்ளம் குழம்பிக் கொண்டிருக்கும் போதே மகேந்திர பல்லவர் நடனத்தை முடித்து விடலாம் என்று சமிக்ஞை செய்தார்.

நடனக் கலையின் அதி தெய்வமும் தமிழ் நாட்டின் தனிப் பெரும் தெய்வமுமான ஸ்ரீ நடராஜமூர்த்தி தில்லைப் பதியில் ஆடிய ஆனந்த நடனத்தை வர்ணிக்கும் பாடலோடும், அதற்குரிய நடன அபிநயத்துடனும் அன்றைய நடன வினிகை முடிவுற்றது.

"இம்மாதிரி ஒரு நடனம் இதற்கு முன்னால் ஒன்றும் நடந்ததில்லை; இனிமேலும் நடக்குமா என்பது சந்தேகந்தான்!" என்று அம் மகா சபையில் கூடியிருந்த ரஸிகர்கள் ஏகமனதாக அபிப்பிராயப் பட்டார்கள்.

"சிவகாமியைப் போன்ற நடனக் கலைச் செல்வி இதற்கு முன்னால் இருந்ததில்லை; இனிமேலும் பிறக்கப் போவதில்லை" என்று பலர் அழுத்தமாகக் கூறினார்கள்.

"சிவகாமியினாலேயே இந்த மாதிரி இன்னொரு தடவை நடன வினிகை நடத்த முடியுமா?" என்று சிலர் ஐயம் தெரிவித்தார்கள்.

*     *     *

மகேந்திர பல்லவர் மீண்டும் சமிக்ஞை செய்ததின் பேரில், ஆயனரும் சிவகாமியும் இரு சக்கரவர்த்திகளும் அமர்ந்திருந்த சிம்மாசனங்களுக்கு அருகே சென்று வணங்கி நின்றார்கள். மகேந்திர பல்லவர் சிவகாமியின் அன்றைய நடனத்தைப் பெரிதும் பாராட்டினார். "ஆயனரே! முன் தடவை இதே இடத்தில் சிவகாமியின் அரங்கேற்றம் நடந்து கொண்டிருந்தபோது, இடையிலே தடைப் பட்டதல்லவா? அந்தத் தடைக்குக் காரணமான வாதாபி சக்கரவர்த்தியே இங்கு இன்று வீற்றிருந்து உமது குமாரியின் அற்புத நடனத்தைப் பார்த்துக் களித்தார். இன்றுதான் என் மனமும் திருப்தியடைந்தது" என்று கூறிவிட்டுச் சிவகாமியைப் பார்த்து, "அம்மா, சிவகாமி! வாதாபி சக்கரவர்த்தி உன்னுடைய நடனக் கலைத் திறமையில் ஒரேயடியாக மயங்கிப் போய் விட்டார். உன்னையும் உன் தகப்பனாரையும் தம்முடன் வாதாபிக்கு அனுப்பி வைக்கும்படி என்னைக் கேட்கிறார். உனக்குப் போகச் சம்மதமா?" என்று வினவினார்.

சிவகாமி கோபத்தினால் தன்னடக்கத்தைக் கூடச் சிறிது இழந்து, தீச்சுடர் போன்ற வார்த்தைகளினால் மறுமொழி சொன்னாள்:— "பிரபு! இந்த ஏழைப் பெண் இந்த தேசத்தில் இருப்பதே தங்களுக்குப் பிடிக்கவில்லையா? நாட்டை விட்டே துரத்தி விடப் பார்க்கிறீர்களா?" என்றாள்.

சுடச் சுடக் கூறிய இம்மொழிகள் ஆயனருக்கும் இன்னும் பக்கத்தில் நின்றவர்களுக்கும் வியப்பையும் சிறிது பயத்தையும் கூட அளித்தன. ஆனால் மகேந்திர பல்லவரின் முகத்தில் மட்டும் புன்னகைதான் தவழ்ந்தது. அவர் வாதாபி சக்கரவர்த்தியைப் பார்த்து, "சத்யாச்ரயா! பார்த்தீர்களா? சாட்டையினால் அடித்து நடனம் ஆடச் சொல்லும் நாட்டுக்குக் கலைஞர்கள் போக விரும்புவார்களா?" என்றார்.

அப்போது புலிகேசியின் முகம் கறுத்ததையும், அவருடைய கண்களில் கனல் எழுந்ததையும் கவனியாமல், மகேந்திரர் சிவகாமியை நோக்கி, "அம்மா, சிவகாமி! உன்னை நாட்டை விட்டுத் துரத்த நான் விரும்பவில்லை. ஏன், இந்த நகரத்தை விட்டு உங்களைப் போகச் சொல்லவே எனக்கு இஷ்டமில்லை. ஆயனரே! இன்று இவ்வளவு அற்புதமாக நடனம் ஆடிய சிவகாமிக்கு நான் பரிசுகள் கொடுக்க வேண்டும். அதுவரை சில தினங்கள் நீங்கள் நகரிலேயே இருக்க வேண்டும். உங்களுக்கு எங்கே இருக்க விருப்பம்?" என்று கேட்டார்.

ஆயனர் தயக்கத்துடன் சிவகாமியைப் பார்க்க, சிவகாமி, "அப்பா! வேறெங்கே போவது? கமலியின் வீட்டில் இருக்கலாம்!" என்றாள்.

"ரொம்ப சந்தோஷம். அப்படியே நீங்கள் கமலியின் வீட்டில் போயிருங்கள். கமலியும் சிவகாமியைப் பார்க்க ஆவலாயிருக்கிறாள். அங்கு வந்து உங்களுடன் அவகாசமாகப் பேசுகிறேன்!" என்றார் சக்கரவர்த்தி.

# சௌந்தரத்தின் நாட்டுப்பெண்




"அடே சீனு, ராஜமய்யங்கார் பெண் கிளி மாதிரி இருக்கு. நீ போய்ப் பார்த்துட்டு வா. அப்புறம் நீயே கல்யாணம் பண்ணிக்கொள்கிறேன் என்பாய்" என்றாள் சீனிவாசனின் தாயார் சௌந்தரம்மாள்.

"ஏன் அம்மா, அம்மா நச்சுகிறாய்? எனக்கெல்லாம் கல்யாணம் பண்ணிக்கத் தெரியும். நான் ஒரு பெண்ணையும் போய்ப் பார்க்க மாட்டேன்!" என்றான் சீனிவாசன்.

இதைக் கேட்டதும் சௌந்தரம் நீர்மல்கின கண்களுடன் உள்ளே சென்று விட்டாள்.

சீனிவாசனுக்குக் கும்பகோணம் காலேஜில் வேலையாகி மாதம் ஒன்று கூடக் கழியவில்லை. பி. ஏ. முதல் வகுப்பில் தேறியிருந்தான். டிமான்ஸ்ட்ரேட்டராக அவன் வகித்த பதவிக்கு மாதம் எழுபத்தைந்து ரூபாய் வந்து கொண்டிருந்தது. வேலை ஏற்பட்ட நாள் முதலே தன் தாயாருடன் குடித்தனம் நடத்தி வந்தான்.

தன் ஒரே மகன் சீனிவாசனுக்கு நல்ல பெண்ணாகப் பார்த்து விவாகம் செய்துவிட வேண்டுமென்பது சௌந்தரத்தின் ஆவல். இளம் வயதிலேயே கணவனைப் பறிகொடுத்து விட்டுத் தன் குழந்தைக்காக வாழ்க்கையில் எவ்வளவோ கஷ்டங்களிடை நீந்தி வந்தவள். ஆகவே அவளிடம் ஒரு அசாதாரணமான பொறுமையும் தன்னடக்கமும் அமைந்திருந்தன.

"என்னவோ, நான் இன்னும் எத்தனை நாளைக்குச் சதம்? பொறுப்பாக ஒரு கிருஹ லக்ஷ்மியிடம் உன்னை ஒப்படைத்துவிட்டுப் போகவேண்டுமென்றுதான் எண்ணம்" என்று சொல்லி முடித்தாள் ஒரு நீண்ட பெருமூச்சுடன். அந்த இரண்டு வார்த்தைகள் மிக்க அர்த்த புஷ்டியுடன் கூடியதாயிருந்தது. சீனிவாசனும் அதை நன்றாகப் புரிந்து கொண்டானோ என்னவோ! அதற்குப் பிறகு அவன் வாய்திறக்கவில்லை.

ஞாயிற்றுக் கிழமையன்று கல்லூரி விடுமுறையானாலும், சீனிவாசன் வீட்டிலிருப்பது துர்லபம். வெளியிலே மத்தியான வேளைகளில் சீட்டாட்டமோ அரட்டையோ அடித்து விட்டுக் காப்பி சாப்பிடும் நேரத்துக்கு வீட்டில் ஆஜராகியிருப்பான். ஆனால் அன்று வெளியில் போனவன் வெகு சீக்கிரமே வீட்டிற்குத் திரும்பி வந்தபோதுதான் அவன் தாயார் பங்கஜத்துடன் உரையாடிக்கொண்டிருந்தாள். பிற்பகல் இரண்டு மணிக்கு மகனின் எதிர்பாராத வரவைக் கண்டு தாயார், "ஏண்டா சீனு, இவ்வளவு சீக்கிரம் இன்னிக்கி? மழைதான் கொட்டும்" என்று கேலியாகக் கூறிக்கொண்டே எழுந்திருக்கவும், பங்கஜம் சமையலறைப் பக்கம் சென்று விட்டாள்.

அன்று அவன் வரவை அவ்வளவு துரிதமாக எதிர் பார்க்காததால் சௌந்தரம் டிபனுக்கு அடுப்பு மூட்டவில்லை. தன் பிள்ளையின் வரவிற்குப் பிறகு மேற்படி காரியத்தில் மூளையவும், பங்கஜம், "மாமி, இன்னிக்கி என்ன டிபன் பண்ணப் போறேள்?" என்றாள்.

"சேமியா வாங்கி வைத்திருக்கிறேன், கிச்சடி செய்யலாம்னு" என்றாள்.

"மாமி, நான் கிச்சடி பண்ணியதே யில்லை. இன்று நான் பண்ணிப் பார்க்

கிறேன். நீங்க சொல்லித் தரேளா? எனக்கு ஆசையா யிருக்கு!"

"அதுக்கென்ன பங்கஜம், உனக்குச் சொல்லிக் கொடுப்பதில் எனக்கென்னவோ ஆசைதான். தெய்வ அனுக்ரஹமிருந்தால்—ஹூம்—" என்று பெருமூச்சு விட்டாள் அந்தப் பெரிய மனுஷி.

பங்கஜம் சிறு வயதானாலும் ரொம்பக் கெட்டிக்காரி. விஷயங்களைக் கிரஹித்துக் கொண்டு திறமையுடனேயே எதையும் செய்து முடிக்கும் ஆற்றல் இருந்தது. அதிலும் சௌந்தரத்திடம் பட்சை கற்றுக் கொண்டு அவன் கிச்சடி செய்தபோது?—நுட்பமாக அறிந்துகொண்டு துடியாகச் செய்த அவள் காரியத்தைக் கண்டு சௌந்தரம் மூக்கின் மேல் விரலை வைத்து விட்டாள்.

டிபன் செய்து முடிந்தபிறகு "என் மாமி, எப்படி யிருக்கோ என்னவோ?" என்று கேட்ட அவள் வினவுக்கு, "போடீ போ, எவ்வளவு நன்றாய்க் கிச்சடி அமைந்திருக்கிறது! இந்தா, இந்தத் தட்டை அவனிடம் வைத்து விட்டு வாயேன்!" என்று அன்புடன் அவளிடமிருந்து உத்தரவு பிறந்தது.

"போங்கோ, மாமி! எனக்கு வெட்கமா யிருக்கு!"

"உம்...சரிதான். ரொம்பக் கெட்டிக் காரியா யிருக்காயே? நாளைக்கு நாட்டுப் பெண்ணு வந்தா என்ன செய்வே?" என்று பரிகசித்தாள் சௌந்தரம்.

கடைசியில் பங்கஜமே டிபனை எடுத்துக் கொண்டுபோய் அவன் மேஜைமேல் வைத்த போது சீனிவாசன் பாடக் குறிப்புகள் சில தயார் செய்து கொண்டிருந்தான். காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்க்க சீனிவாசன் முயற்சிக்காவிடினும் அவனருகே, டிபன் தட்டை வைத்தபோது எதிரிலிருந்த பெரிய நிலைக் கண்ணாடியில் அவள் உருவம் பிரதிபலித்தது. சீனிவாசனின் கண்கள் அரைக் கணத்தில் அச் சிறுமியின் அழகைப் பருகின.

நாணமடைந்த அந்தப் பெண் சட்டென்று தட்டை வைத்து விட்டுப் போனதும், தன் பாடக் குறிப்புகளை யெல்லாம் தூக்கட்டி வைத்துவிட்டு அவள் வைத்த சிற்றுண்டியைச் சாப்பிடலானான். பொதுவாக எதற்குமே குற்றம் சாட்டும் சுபாவமுள்ள அவன் அன்று ஏனோ கிச்சடியைப் பற்றிக் கொஞ்சமும் குறை கூறவில்லை.

அன்று இரவு தாயாரிடம் அவன், "மத்தியானம் வந்திருந்ததே, அந்தப் பெண் யார் அம்மா?" என்று கேட்டான்.

"அவள்தான் ராஜமய்யங்கார் பெண் பங்கஜம்" என்று கூறி விட்டு "இன்று கிச்சடியும் அவளேதான் செய்தாள்!" என்று வழுவிலேயே கூறி முடித்தாள் சௌந்தரம்.

தன் பிள்ளையின் வாயைக் கிண்டிவிட்டு அவளைப்பற்றி அவனது அபிப்பிராயத்தை அறிய வேண்டுமென்பது அவள் எண்ணம். ஆனால் அதற்கு நேர்மாறாக, மேற்கொண்டு வார்த்தையாடாமலே அவன் படுத்து உறங்கி விட்டான்.

பின்னை தன் ஏற்பாட்டிற்குத் தடை செய்வான் என்றே அவள் முற்றிலும் எதிர் பார்த்தாள். ஆனால் பங்கஜத்தை விவாகம் செய்து கொள்ள அவன் சம்மதிக்கவே அவள் சந்தோஷம் இரட்டிப்பாயிற்று. பேச்சோடு பேச்சாய் சௌந்தரம், இவை நடந்த சில நாட் கழித்துத் தன் பிள்ளையிடம், "தை மாதம் 24-ம் தேதியே நல்ல முகூர்த்தம் ஒன்று இருக்கிறதாம். அதிலேயே விவாகத்தை நடத்தலாம்" என்றாள்.

"என்ன அம்மா! அதற்குள் எப்படி முடியும்?" என்ற கேள்வியைக் கேட்டு வைத்தான் சீனிவாசன்.

"என், இன்னும் பதினைந்து நாட்களுக்கு மேல் கிடக்கிறதே?"

"உன் இஷ்டம்."

அவர்கள் சம்பாஷணை அதற்கு மேல் நீடிக்கவில்லை.

ராஜமய்யங்காருக்குப் பூர்வீக ஆஸ்தி ஒன்றும் கிடையாது. தாலுகா ஆபீஸிலிருந்து ரிடயர் ஆகி — தாசில்தாராக அல்ல,





"ஏய், ஏன்டா இந்த விளக்கைப் போட்டாய்? இது நூறு பவர் பல்பு ஆயிற்றே! அந்த லேட்டைப் போடுடா!"

"அதுவே பல்பு இல்லீங்களே?"

"இல்லா விட்டால் இந்த பல்பைக் கழட்டி அதிலே போடுகிறதுதானே? அதுக்குக்கூட மூளையில்லையா!"

---

குமாஸ்தாவாகத்தான்—பென்ஷன் முப்பது ரூபாய் வந்து கொண்டிருந்தது. இரண்டு பெண்களில் மூத்தவள் விவாகமாகிப் புக்ககம் சென்று விட்டாள். கையில் பணமில்லாததால் அவளை கோரக்பூரில் ரயில் வேலைக்காரன் ஒருவனுக்கு இரண்டாம் தாரமாக விவாகம் செய்திருந்தார். விவாகமாக வேண்டியவள் பங்கஜம் ஒருத்தி தான். வேறு ஆண் சந்ததி கிடையாது. அவர் குமாரிகள் இருவருமே அழகில் ஒருவருக்கொருவர் குறைந்தவரல்ல.

சௌந்தரத்துக்கு ராஜமய்யங்கார் வெகு நாள் பழக்கம். அத்துடன் அவன் தாயார் வகையில் ஒரு தூர பந்துவுங்கூட.

விவாக தினத்திற்கு இரண்டு நாட்கள் இருக்கும்பொழுது சகல காரியங்களும் நிறைவேறி யிருந்தன.

அன்று வியாழக்கிழமை. மறுநாள் விவாக தினம். அன்று இரவு திடீரென்று ஏற்பட்ட மாரடைப்பினால் ராஜமய்யங்கார் இறந்து விடவே, கல்யாணம் திடீரென்று நின்று விட்டது. அதனால் ஏற்பட்ட அதிர்ச்சியில் சௌந்தரம் வெகு நாட்கள் படுக்கையில் கிடக்க நேரிட்டது.

## 2

ராஜமய்யங்காரின் எதிர்பாராத மரணத்தால் நெருங்கிய தொடர்பு ஏற்படவிருந்த இந்த இரண்டு குடும்பங்களும் பிரிந்து விட்டன. ராஜமய்யங்காரின் சாவுக்குப் பின் தாய்தந்தையற்ற தன் மருமகளை—பங்கஜத்தை — சடகோபன் தன்னுடன் ஹைதராபாத்துக்கு அழைத்துச் சென்று விட்டான்.

சௌந்தரத்தின் குடும்பம் மட்டும் இடம் பெயரவில்லை. சீனிவாசனுக்கு அவன் தாயாருக்கு ஏற்பட்ட இந்த அதிகமான அதிர்ச்சி போதாதென்று மறு வருடம் குறிப்பிடத் தக்க சம்பவம் அந்தக் குடும்பத்திற்குத் துக்கத்தையே கொண்டு வந்தது.

கல்லூரியின் நிர்வாகக் கமிட்டியாரின் தலைவருக்குப் பந்துவான ஒரு எம். ஏ. பட்டதாரிக்கு வேலை பிறப்பிக்க வேண்டி சீனிவாசனின் வேலைக்குச் சீட்டு கொடுக்க நேர்ந்தது.

"ராவ்பகதூர் வெங்கடரங்கய்யங்கார் பெண் ராதாவுக்கு ஒரு 'ட்யூஷன்' உபாத்தியாயர் தேவையாம். ஏன், நீ போய் அவரைப் பாரேன். அவர் மூலமாக உத்தியோக விஷயங்களுக்கும் ஏதாவது ஏற்பாடு செய்து கொள்ளலாம்" என்ற யோசனையைச் சீனிவாசனிடம் அவன் சஹபாடி சிவஸ்வாமி ஒரு நாள் எடுத்துக் கூறினன்.

ராவ்பகதூர் வெங்கடரங்கய்யங்கார் தம் ஒரே பெண் ராதையின் 'டியூஷனுக்கு' நல்ல உபாத்தியாயராய்க் கிடைத்தால் மாதம் ரூபாய் ஐம்பதுகூடக் கொடுக்கத் தயாராயிருந்தார். அவர் ஜில்லா ஜட்ஜாயிருந்து ரிடயர் ஆகியிருந்தவர். அதனால் அவருக்கு ஏற்பட்டிருந்த வருமானத்துடன் பூர்வீக பூஸ்திதியும் இருந்தது.

சீனிவாசனின் அதிர்ஷ்டமோ, என்னவோ, அன்று அவன் ராவ்பகதூரைப் பார்த்த வேளை நல்ல வேளை. இல்லாவிடில் மறுநாள் முதல் அவன் ராதைக்கு 'டியூஷன்' சொல்லிக் கொடுக்கும் பொறுப்பை எப்படி ஏற்றுக்கொண்டிருக்க முடியும்? அதனால் அவனுக்குக் கிடைத்து வந்த ஐம்பது ரூபாய் சம்பளம் அவன் வறுமைப் பிணியை ஓரளவு தீர்த்து வைத்தது. சீனிவாசனின் உண்மையான உழைப்பும், நேர்மையும் வீண் போகவில்லை. இண்டர்மீடியட் பரீட்சையின் தேர்தல் முடிவுகளை இரண்டு வருஷங்களுக்குப்பின் ஒரு தினம் பத்திரிகையில் ராவ்பகதூர் பார்த்ததுமே நாற்காலியை விட்டுத் துள்ளிக் குதித்தார் — தம் ஒரே பெண்ணின் பெயர் முதல் கிளாஸில் இராஜதானி ஜாபிதாவில் இரண்டாவதாக வெளியிடப்பட்டிருந்தது.

வெங்கடரங்கய்யங்கார், தம்முடைய செல்வாக்கை உபயோகித்துச் சென்னைக் கல்லூரி ஒன்றில் சரித்திர போதகரின் வேலைக்குச் சிபார்சு செய்து வைத்தார். அத்துடன் அவன் குடும்பத்திற்கு ஏற்பட்டிருந்த கடன் சிக்கல்களுக்கும் அவராலேயே ஒரு 'விடிவு' ஏற்பட்டது.

## 3

அன்று இரவு ஒன்பது மணி. ஆய்ந் தோய்ந்து அப்பொழுதுதான் சீனிவாசன் சாவகாசமாகத் தன் தாயின் படுக்கைக் கருகில் உட்கார்ந்திருந்தான். தன் அருகில் அமர்ந்திருந்த மகனை வெகு நேரம் உற்றுக் கவனித்த சௌந்தரத்திற்குப் பழைய ஞாபகங்கள் குமுறிக்கொண்டு வந்தன.

“அடே சீமாச்சு, கல்யாணமே செய்து கொள்ள மாட்டாயா? மஹாலட்சுமிபோல ஒரு நாட்டுப் பெண்ணைக் கொண்டு குடியும் குடித்தனமுமாய்ப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டேனே! ......” — அதற்கு மேல் பேச முடியாமல் பலபல என்று தன் கண்களினின்றும் நீருகுத்தாள் சௌந்தரம்.

“அம்மா, வீணாக ஏன் கவலைப்பட்டுக் கொள்கிறாய்? உன் ஆசையைப் பூர்த்தி செய்து விடுகிறேன். கவலையற்றுத் தூங்கு. மணி பத்தாய் விட்டது” என்று புத்துணர்ச்சி தோன்றக் கூறி விட்டுச் சால்வையை எடுத்து மூடினான் சீனிவாசன்.

மறு நாள் கல்லூரிக்குப் போனதும், வெங்கடரங்கய்யங்காரிடமிருந்து சீனிவாசனுக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. உடனே அதை அவன் ஆவலுடன் பிரித்துப் பார்த்தான். அவனுக்கு அடிக்கடி அவர் கடிதம் எழுதத் தவறினதில்லை.

கும்பகோணம்
8—10—43

சிரஞ்சீவி சீனுவுக்கு. இப்பவும் ராதையின் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. மாப்பிள்ளைக்கு முனிசீப் வேலை. நல்ல வரன். அத்துடன் உனக்கும் நல்ல பெண்ணாகப் பார்த்திருக்கிறேன். ஒரே முகூர்த்தத்தில் ராதை கல்யாணத்துடன், உனக்கும் விவாகம் செய்து வைப்பதில் எனக்கு ஆசை. இதற்கு நீ தட்டமாட்டாய் என்று நினைக்கிறேன். பதினைந்து நாட்களுக்குக் குறையாமல் லீவு எடுத்துக்கொண்டு உடனே புறப்பட்டு வரவும்.”



“அடடா! அடையாளம் தெரியாமே இப்படி அடியோடு மாறிப் போய்விட்டாயே! முந்தியெல்லாம் கட்டையாய்க் குட்டையாய் எப்படி இருந்தே? இப்போ இளைத்துத் துரும்பாய்ப் போயிட்டயே!......”



“......முந்தி செக்கச் செவேரென்று ராஜா வாட்டமா இருந்தயே; இப்போ இப்படி ரொம்பக் கருத்துப் போயிட்டயே, சிவராமா!”



“இல்லே, பாட்டி! நான் சிவராமன் இல்லே! என் பெயர் சாம்பமூர்த்தி யல்லவா?”




“அநியாயமான்னா இருக்கு! உடம்புதான் மாறிப்போனா லென்றால் பெயரைக் கூடவா இப்படி மாத்திக் கொள்ளணும்?”

சாயங்காலம் வெகு சீக்கிரமே கல்லூரியிலிருந்து வந்து தன் தாயாரிடம் கடிதத்தைப் படித்துக் காண்பித்தான். கடிதத்தைப் படித்த சற்று நேரத்திலேயே அவன் தாயாரின் தேகஸ்திதியைப் பரிசீலனை செய்யவேண்டி டாக்டர் அவர்களிருந்த அறையினுள் பிரவேசித்தார்.

டாக்டர் தம் பரிசீலனை முழுவதையும் முடித்துக் கொண்டு, "அப்பா! இன்னும் அம்மா அதிக பட்சம் ஒரு மாதத்திற்கு மேல் உயிருடன் இருக்க முடியாது. ஹிருதயத்தில் சீர்திருத்த முடியாத தளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது" என்றார் சீனிவாசனிடம்.

"நிஜமாகவா டாக்டர்?" என்று உணர்ச்சி மேலிடத் தன்னை மறந்து கத்தினான் சீனு.

வெகு நேரத்திற்குப் பிறகு தாயார் கண் விழித்தபொழுது சீனு கவலையுடன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, "எனக்கு ஒரு வாக்குக் கொடுப்பாயா, சீனு......?" என்றாள்.

"என்ன, அம்மா!" என்று கேட்டுக் கொண்டே சீனிவாசன் தாயின் கைகளைப் பிரேமையுடன் பிடித்துக் கொண்டான்.

"ஒன்றுமில்லை. ஒருவேளை உனக்குக் கல்யாணம் நடப்பதற்குள் நான் இறந்துவிட்டாலும் கல்யாணத்தை நிறுத்திக் கொள்ளாதே. நான் உன்னைப் பெற்ற தாய். நான் சொல்வதைக் கேளு......அபசகுனம் என்று தள்ளிவிடாதே ...... கேட்டயா? முன்பு இப்படித்தானே ராஜமய்யங்கார் ......" என்று இழுத்தாள் சௌந்தரம்.

"ஆனால் என்ன, அம்மா? சொல்லேன்" என்று தாயின் முகத்தருகே சென்று சொன்னான் சீனிவாசன்.

"அந்தப் பெண்ணை—என் நாட்டுப்பெண்ணாகப் போகிறவளை ஒருதரம் கண்ணாரப் பார்த்துக் கட்டி ஆசீர்வதிக்கணும்—அப்பொழுதுதான் என் குறை தீரும்."

## 4

சீனிவாசன் கும்பகோணத்துக்குச் சென்று மறுநாளே திரும்பி வந்துவிட்டான். மறுநாள் காலை சௌந்தரம் படுத்திருந்த அறையினுள் நுழைந்த சீனிவாசன், "அம்மா! அம்மா! இதோ உன் நாட்டுப் பெண் யாருன்னு பாரு! பழைய நாட்டுப் பெண்தான் ...... பங்கஜம்!" என்று அயர்ந்திருந்த தன் தாயாரை எழுப்பினான்

அதற்குள் அவளருகில் சென்ற பங்கஜம், "மாமி, மாமி! இங்கே பாருங்கள், நான் வந்திருக்கிறேன், பங்கஜம்!" என்று தன் மிருதுவான கைகளால் சௌந்தரத்தின் தேகத்தைப் பற்றினாள். மெதுவாகக் கண் விழித்த சௌந்தரம் பங்கஜத்தின் முகத்தைக் கண்டதும் அதிசய மடைந்தவளாய், "ஆ. பங்கஜமா? நீயேவா!...ஆ!...என் நாட்டுப் பெண்ணு? பாக்கியமே பாக்கியம்... இங்கே வாடி, அம்மா!" என்று அவளை வாரிக் கட்டிக் கொண்டாள்.

நிலையற்ற சந்தோஷத்தைத் திடீரென்று அனுபவித்த சௌந்தரத்தின் ஹிருதயம் பிறகு ஓடாமலே நின்று விட்டது.

அடுத்த வருஷம் ராவ்பகதூர் வெங்கட ரங்கய்யங்கார் கிரஹத்தில் ஏக காலத்தில் இரண்டு விவாகங்கள் நடந்தன. வதூவரர்களும் நமக்கு அறிமுகமானவர்களே. சடகோபனும் (பங்கஜத்தின் தமையன்) ராதையும்—சீனிவாசனும், பங்கஜமும்.



# வெறுப்பை உற்சாகமாக மாற்றுக!

யுத்த சமயம் வாழ்க்கை மிகவும் கஷ்டமுள்ளதாக இருக்கிறது. உணவுப்பொருள்கள் கிராக்கியாக இருக்கின்றன. வேலைக்காரர்களை வைத்திருப்பது கஷ்டம். எரி துரும்பு, துணிமணி அதிக செலவுள்ளதாயும் கிடைப்பது கஷ்டமாயும் இருக்கின்றன. ஓய்வென்றாலோ-அது எங்கு கிடைக்கிறது?

இருந்தபோதிலும் நீங்கள் டீ அருந்தலாம். இன்னமும் டீ நிறையவும் மலிவாகவும் கிடைக்கிறது. புதிதாக தயாரித்த நல்ல ஒரு கோப்பை டீ மன அமைதியை கொடுத்து தளர்ந்த நரம்புகளுக்கும் பலம் உண்டாக்குகிறது. அது

சோர்வை நீக்குகிறதே தவிர
அது ஒருபொழுதும்
அளிக்காத நமது சொந்த



கெடுதல் செய்வதில்லை.
நமக்கு கெடுதல்
இந்திய [illegible]






மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை

# பெனிஸிலின்






"தேடப் போன மருந்து காலிலே அகப்பட்டது" என்பது பழமொழி. 'பெனிஸிலின்' என்ற அற்புத மருந்து தேடப் போகாத பொழுதே கையில் அகப்பட்டது! உலகத்தில் எவ்வளவோ ஆச்சரியங்களும் அற்புதங்களும் நடக்கின்றன. அவற்றில் அகஸ்மாத்தாக திடீரென்று சம்பவிக்கும் அற்புதங்களும் உண்டு. நீராவியின் மூலம் பாத்திரத்தின் மேல் மூடி நகர, அதிலிருந்து ஸ்டீபன்ஸன் என்பவர் ரயில் வண்டியைக் கண்டு பிடிக்கவில்லையா? அதைப் போன்ற ஒரு அகஸ்மாத் அற்புதம்தான் பெனிஸிலினும்.

1929-ம் வருஷம் அலெக்ஸாந்தர் பிளெமிங் என்ற டாக்டர் ஒருவர் ஒரு தட்டில் பதரப்பட்ட நோய்க் கிருமிகளை வைத்துக் கொண்டு ஏதோ ஆராய்ச்சிகள் நடத்திக் கொண்டிருந்தார். அந்த சமயம் திடீரென்று தட்டில் பச்சையாக ஒரு வஸ்து தென்பட்டது. அது என்னவென்று கூர்ந்து கவனித்தார். சில நிமிஷத்திற்கெல்லாம் அந்தப் பச்சையான வஸ்துவைச் சுற்றியிருந்த நோய்க் கிருமிகள் அவ்வளவும் இறந்து போயின. அதன் காரணம் என்னவென்று அறிய அவர் மேலும் பரீட்சைகள் நடத்தினார். பச்சையான வஸ்து மேற்படி பூச்சிகளினின்றே தோன்றி மேற்படி பூச்சிகளையே கொல்லும் அதிசயம் புலப்பட்டது. அந்த ஆராய்ச்சியின் பலனாகத் தோன்றிய அற்புத மருந்துதான் பெனிஸிலின் மருந்து.




இதற்குப் பிறகு பத்து வருஷங்கள் வரை அந்த மருந்து அநாதரவாய்க் கிடந்தது. அதைப்பற்றி அவ்வளவாக யாரும் அக்கரை காட்டவில்லை. 1940-ல் மறுபடியும் ஆக்ஸ்போர்டு யூனிவர்ஸிடியைச் சேர்ந்த புரொபஸர் ஹோவார்டு ப்ளோரி என்பவர் பெனிஸிலினைப் பற்றி மேலும் ஆராய்ச்சிகள் நடத்தினார். அப்புறம் அந்த மருந்து முக்கியமாக நாலைந்து இடங்களில் மட்டுமே தயாராயின.

இந்த மருந்தினால் என்னென்ன வியாதிகள் குணமாகின்றன என்று சொல்லுவதைக் காட்டிலும் என்னென்ன வியாதிகள் குணமாவதில்லை என்று சொல்லி விடுவது சுலபம். ஆஸ்த்மா, டைபாயிட், டைபஸ், கிரந்தி முதலிய சில வியாதிகளைத் தவிர சகலரோக நிவாரணியாக இருக்கிறது பெனிஸிலின்.

அன்னை கஸ்தூரிபா ஆகாகான் அரண்மனையில் நோய்வாய்ப்பட்டிருந்த சமயம் இந்த மருந்தை இந்திய சர்க்கார் லண்டனிலிருந்து ஆகாய விமானம் மூலம் கொண்டு வந்தார்கள். ஆனால் அன்னை கஸ்தூரிபா அதற்குள் காலமாகிவிட்டதால் பெனிஸிலினுக்கு அடிப்பதற்கிருந்த யோகமும் வீணாகிவிட்டது. இருந்தாலும் இந்தியாவில் பெனிஸிலினுக்கு ஒரு நல்ல விளம்பரம் கிடைத்ததற்கு அன்னை கஸ்தூரிபாயே காரணம்.

தற்சமயம் இந்த அதிசய மருந்து ஓரளவு இந்தியாவுக்கும் வந்துகொண்டிருக்கிறது.



# சர்க்கஸ் யானை

ராஜி

பெரிய சர்க்கஸ் கம்பெனி வந்துவிட்டால் குழந்தைகளின் குதூகலத்திற்குக் கேட்கவேண்டுமா? பெரிய கூடாரம். அதைச் சுற்றிலும் கூண்டில் அடைபட்டிருந்த சிங்கம், புலி, சிறுத்தை முதலியவைகள். அதுவுமல்லாமல் யானைகள், குதிரைகள், குரங்குகள், முதலிய பிராணிகளும் இருந்தன. சிறுவர்களும் சிறுமிகளும் கூட்டம் கூட்டமாகக் கூடாரத்தைச் சுற்றிச் சுற்றி வந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

வேடிக்கை பார்க்கவந்த குழந்தைகளின் கூட்டத்தில் சிறுவன் பாலுவும் நின்று கொண்டிருந்தான். வீட்டை விட்டுக் காலையில் எட்டுமணிக்கு வந்த பாலு மணி பன்னிரண்டாகியும் கூடாரத்தைவிட்டு வரவில்லை. சுற்றிச் சுற்றி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். "அதோ பார், அந்தக் குரங்கை! இதோ இந்த யானை செய்கிற வேடிக்கையைப் பார்! சிங்கம் கர்ஜனை செய்வது பயமா இருக்கிறதே" என்றெல்லாம் குழந்தைகள் சத்தம் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

பாலு கையில் விளையாட்டுச் சாமான் ஒன்றை வைத்துக் கொண்டிருந்தான். சாவி கொடுத்தால் ஓடக் கூடிய எலிப் பொம்மை தான் அது. அப்பொம்மைக்கு ஓடுவதற்கு ஏதுவாக நான்கு சிறிய சக்கரங்கள் பொருத்தப்பட்டிருந்தன. பாலு அந்த விளையாட்டுச் சாமானின் மீது மிகவும் பிரியம் வைத்திருந்தான்.

கூடாரத்தில் மாட்டியிருந்த கடிகாரம் மணி பன்னிரண்டு அடித்தது. "சாப்பிடுவதற்கு நாழி ஆகிவிட்டது. அம்மா தேடுவாள்" என்று சொல்லிக் கொண்டே பாலு சர்க்கஸ் கூடாரத்தைவிட்டு வீட்டைநோக்கி வேகமாக நடக்க ஆரம்பித்தான். சற்று தூரம் வந்தவுடன் ஒரு பெரிய ஆரவாரம் கேட்டது. சர்க்கஸ் யானை சங்கிலியை அறுத்துக்கொண்டு கூடாரத்தைவிட்டு ஓடி வருகிறது என்று ஜனங்கள் கூக்குரலிட்டார்கள். தெருவில் இருந்த ஜனங்கள் யானையிடமிருந்து தப்பித்துக்கொள்ள தெருவில் நாலா பக்கமும் சிதறி ஓட ஆரம்பித்தார்கள்.

வீட்டை நோக்கி வேகமாக நடந்து கொண்டிருந்த பாலு சத்தத்தைக் கேட்டுத் திடீரென்று திரும்பிப் பார்த்தான். ஜனங்கள் சப்தமிட்டது வாஸ்தவம்தான். பாலு எந்த யானையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தானோ அதே யானை காலில் சங்கிலியுடன் நாலுகால் பாய்ச்சலில் வந்துகொண்டிருந்தது. அப்பொழுது அந்த வீதியில் பாலுதான் நடந்து கொண்டிருந்தான். மற்றவர்கள் யாவரும் பயந்து பதுங்கினார்கள். பாலு திரும்பிப் பார்த்தவுடன், யானையைக் கண்டு நடுங்கினான். யானையும் பாலுவை நோக்கியே ஓடிவந்துகொண்

டிருந்தது. பாலுவிடம் யானை நெருங்க ஐந்தே நிமிஷங்கள் தான் இருந்தன. பக்கத்தில் இருந்தவர்கள், "பையா, பையா! ஓடி வந்து விடு" என்று சப்தமிட்டார்களே தவிர ஒருவருக்காவது பாலுவை ஆபத்திலிருந்து தப்புவிக்கத் தைரியம் வரவில்லை.



படத்தில் தெரியும் நான்கு குழந்தைகளில் ஒரு குழந்தை ஒரு பொம்மையை ஒளித்து வைத்துக் கொண்டிருக்கிறது. அந்த நான்கு குழந்தைகளின் பின்புற நிழல் தோற்றத்தையும் படத்தில் கீழ் வரிசையில் காணலாம். இந்த நிழல் படத்தைப் பார்த்து விட்டுப் பொம்மை வைத்திருக்கும் குழந்தை யார் என்று சொல்லுங்கள், பார்க்கலாம்!

**யா**னை நெருங்கி விட்டது. அடுத்த விநாடியில் பாலுவின் கதி என்ன ஆகுமோ என்றிருந்தது. அப்பொழுது நடுக்கம் அடைந்த பாலு சற்று யோசித்தான். தைரியம் கொண்டான். தன் கையிலிருந்த விளையாட்டு எலிக்கு அவசரம் அவசரமாகச் சாவி கொடுத்தான். யானை தன்னிடம் நெருங்கும் சமயத்தில் அந்த விளையாட்டு எலியைக் கீழே விடவே அது 'உர்' 'உர்' என்று சத்தமிட்டுக் கொண்டு ஓட ஆரம்பித்தது. அதைப் பார்த்த யானை வெருண்டு பயந்து சற்று நின்றது. விளையாட்டு எலி அதற்குள் யானையை ஒரு சுற்றுச் சுற்றி வந்தது. மறுமுறை சுற்ற ஆரம்பித்தது. யானை அதைப் பார்த்தவுடன் நடுங்கிற்று. தும்பிக்கையைமேலே தூக்கிக்கொண்டு அசையாமல் நின்றது.

இந்தச் சம்பவத்தைப் பார்த்த அங்கு கூடியிருந்த ஜனங்கள் ஆச்சரியப்பட்டார்கள். யானையைத் துரத்திக் கொண்டே வந்த சர்க்கஸ்காரன் பாலுவிடம் ஓடிவந்தான். பாலுவைக் கட்டிக் கொண்டான். "குழந்தாய்! உன்னால்தான் என் யானையைப் பிடிக்க முடிந்தது. விளையாட்டு எலியை வைத்துக்கொண்டு எப்படி யானையை நிறுத்தினாய்?" என்று கேட்டான். பாலு சிரித்துக்கொண்டே "நான் சமயோசிதமாகச் செய்த யுக்திதான் இது. சாவி கொடுத்துக் கீழே விட்டவுடன் விளையாட்டு எலி ஓடிற்று. யானை அதை நிஜ எலி என்று நினைத்துப் பயந்து நின்றது. எலி சுற்றிவரவே எங்கே தன் தும்பிக்கையை எலி வளை என்று நினைத்து அதற்குள் புகுந்துவிடப் போகிறதோ என்று பயந்து தும்பிக்கையை மேலே தூக்கிக்கொண்டு நின்று விட்டது. நீங்கள் பிடித்து விட்டீர்கள்" என்றான். "எலியைக் கண்டால் யானைக்குப் பயம் என்று நான் ஒரு புஸ்தகத்திலும் படிக்கவில்லையே" என்றான் சர்க்கஸ்காரன். "இனிமேல் தான் புஸ்தகத்தில் வரும்" என்று சாதுர்யமாகப் பதில் சொன்னான் பாலு.

அன்று இரவு எட்டு மணிக்குத் தன் அப்பா, அம்மா, அண்ணா, தங்கை முதலியவர்களுடன் பாலு ஆனந்தமாகச் சர்க்கஸ் பார்த்தான் என்று சொல்லவும் வேண்டுமா?



# அன்றும் இன்றும்

கிரிஜா

அப்பா, அம்மாவுக்கு நான் ஒரே பெண். அதனால் அவர்கள் அன்பு முழுவதையும் கவர்ந்து கொண்ட எனக்கு அவர்கள் செல்லச் சீராட்டலால் பல அசட்டுக் குணங்களும் படிந்திருந்தன. அம்மாவைவிட அப்பாவிடத்தில்தான் என் ஹடத்திற்கு அதிகச் செல்வாக்கு இருந்தது. என் பொருட்டு அப்பா பட்ட கஷ்டம் கொஞ்சமல்ல. ஆனாலும் அதை அவர் பொருட்படுத்தவே மாட்டார். நான் சந்தோஷமாக இருப்பது ஒன்றே அவருக்கு எல்லையற்ற ஆனந்த மளிக்கும். அப்பா என்னிடம் வைத்திருந்த அளவற்ற அன்பினால் எனக்குச் செய்ய வேண்டியவைகளை யெல்லாம், செய்வதற்குரிய காலத்திற்குச் சற்று முன்பாகவே செய்துவைத்தார். என்னை மணக்கோலத்தில் காண விரும்பிய என் தந்தை, பால்ய வயதிலேயே எனக்கு விவாகமும் நிச்சயித்தார்.

அப்பாவின் செல்லப் பெண்ணான எனக்கு எதுவும் ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. மணவறையில் என் கையைப் பற்றிய மணமகனை வெகு அலக்ஷியமாகப் பார்த்துச் சிரித்தேன். மாலையில் நடந்த நலங்கில் பாதியில் எழுந்து ஓடிவந்து என் அப்பாவின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதேன். "அப்பா! அந்தப் பிள்ளை பந்தைப் பிடுங்குகிறேன் என்று என் கையைக் கிள்ளிவிட்டது! இனி அந்தப் பிள்ளையோடு நலங்கிடமாட்டேன்" என்று நான் சொன்னேன். அப்பா இடி இடியென்று சிரித்தார். "அசடே! அப்படியெல்லாம் சொல்லப்படாதம்மா" என்று சொல்லி என்னைச் சமாதானப் படுத்தினார். ஆனாலும் என் குழந்தையுள்ளத்தில் அந்தப் பிள்ளையிடம் தீராத பகைமையே குடிகொண்டது. அதனால் மேலும் நடந்த மணச் சடங்குகளில் மணமகனுடன் ஒத்துழைக்க மறுத்துப் பிடிவாதம் பிடித்தேன்.

இதனாலெல்லாம் கோபங்கொண்ட சம்பந்திகள் போகும்போது தங்கள் ஆத்திரத்தை யெல்லாம் காட்டி விட்டனர். 'சர்க்கரைக் கூடை வைக்கவில்லை' என்று ஆரம்பித்த சண்டை முற்றி வசை மாரியில் முடிந்தது. அப்பாவும் கோபத்தில் ஏதேதோ கத்தினார்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் என்னை உடனே கொண்டுவந்து விடுமாறு என் புக்ககத்திலிருந்து தாக்கீது பிறந்தது. அப்பா கொண்டுவிட மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தார். ஆனால், அம்மா கொண்டுவிடத்தான் வேண்டும் என்று அப்பாவுடன் சண்டை பிடித்தாள். அம்மாவின் சொல்லுக்கு அஞ்சி என்னைப் புக்ககம் கொண்டு விட்டார் அப்பா.

"ஜடமாதிரி நிற்கிறாயே? இந்தப் பாத்திரங்களைத் தேயடி" என்று கடுமையான குரலில் உத்தரவிட்டார் என் மாமியார். அப்போது சிறியவளாகிய எனக்கு மனதில் தோன்றும் எண்ணங்களை மறைக்கவோ, பொறுக்கவோ சக்தியில்லை. "பாத்திரம் தேய்க்க நானென்ன வேலைக்காரியா?" என்று என் மனதில் தோன்றிய எண்ணத்தை வெளியிலும் சொல்லி விட்டேன். அவ்வளவுதான்; வந்துவிட்டது கோபம்! குடியே முழுகி விட்ட மாதிரி கத்த ஆரம்பித்தார் என் மாமியார். அதே சமயம் சட்டக் கல்லூரியிலிருந்து திரும்பிய என் கணவர், "என்னம்மா, சத்தம்?" என்றார் கடுகடுப்புடன். "கொஞ்சமாவது அடக்கம் இருக்காடா? என்னோடு எதிர்த்தெதிர்த்துப் பேசுகிறாள்......" என்று மேலும் விவரித்தார் என் மாமியார். அவர் கோபத்துடன் என் பக்கம் திரும்பினார். "நானொன்றும் எதிர்த்துப் பேசவில்லை" என்றேன் சட்டென்று.

"தெரிகிறதே! உன் மூஞ்சியைப் பார்த்தாலே அது தெரிகிறதே. அதிகப் பிரசங்கி! உன் துடுக்குத் தனத்தை யெல்லாம் மூட்டை கட்டி வைத்து விட்டு, இங்கு நாய்மாதிரி கிடக்க வேண்டும்" என்றார் என் கணவர் அதிகாரக் குரலில்.

நாயாம்! அதிகப் பிரசங்கியாம்! எனக்கும் கோபம் வந்தது. "முடியாது! உங்களுக்கு அடங்கி நாய்மாதிரி கிடக்க முடியாது!" என்றேன் பிடிவாதமாக.

அவர் கையிலுள்ள புஸ்தகங்களை வீசி யெறிந்தார். ருத்ரமூர்த்திபோலிருந்த

அவர் முகத்தைக் கண்டு ஒரு க்ஷணம் என் உடல் நடுங்கிற்று. சுளீரென்று என் கன்னத்தில் ஒரு அறை விழுந்தது; என் பின்னலைப் பற்றி யிழுத்துப் பக்கத்து உள்ளில் தள்ளிக் கதவைப் படாரென்று சாத்திக் கொண்டு போய் விட்டார்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு என்னை அழைத்துப் போக வந்த என் தந்தையைக் கண்டதும் 'கோ' வென்று கதறி விட்டேன். விஷயங்களைக் கேட்டதும் அப்பா கோபத்தால் துடித்தார். ஆனாலும் அதை அடக்கிக் கொண்டு, "உன்னைக் கைநீட்டி அடித்தானா? கிடக்கிறான் அற்பப் பயல்" என்று சொல்லி, உடனே என்னையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டு விட்டார்.

காலம் மெல்ல ஊர்ந்தது. பத்தாவது வகுப்பில் முதலாவதாகத் தேறியதுடன், பாட்டுப் போட்டியில் பரிசும் பெற்றேன். அந்நாளில் ஸ்திரீகள் சுதந்திரத்திலும், அவர்கள் முன்னேற்றத்திலும் பெரிதும் ஆர்வங்கொண்ட ஒரு சிலரில் என் தந்தையும் ஒருவர். அக்காரணத்தால் பெரிய பாடகரை வைத்து மேலும் என் சங்கீதத்தை அபிவிருத்தி செய்ய முயன்றார். என்னைப் பெரிய பாடகியாக்கிப் பெருமையடைய வேண்டும் என்பதே அவர் ஆவல். அதற்கு வேண்டிய முஸ்தீபுகளெல்லாம் செய்வதில் முனைந்தார் என் அப்பா.

இதெல்லாம் என் அம்மாவுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. "ருக்கு! நீ செய்வது கொஞ்சமும் நன்றாயில்லை; கல்லென்றாலும் கணவன், புல்லென்றாலும் புருஷன். அவனோடு வாழ்ந்தால்தான் உயர்வும், பெருமையும்" என்பாள். இது விஷயத்தில் மட்டும் அப்பா, அம்மாவின் இஷ்டப்படி நடக்கக் கண்டிப்பாக மறுத்துவிட்டார்.

என் கணவர் அப்பாவுக்கு எழுதினார். ஆனால் அப்பா, என்னைக் கொண்டுவிட முடியாது என்று கண்டிப்பாக எழுதி விட்டார். கோர்ட்டின் மூலம் என்னைப் பெற விரும்புகிறார் என் கணவர் என்று தெரிந்தபோது, அப்பாவுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. "அவ்வளவிற்கு வந்து விட்டானா அற்பப்பயல்? இருக்கட்டும்; ஜீவனாம்சப் பணத்தையும் கறந்து விடுகிறேன்" என்று குதித்தார். வழக்கும் நடந்தது. என் தந்தையே வெற்றி பெற்றார்.

அப்பா என் ஜீவனாம்சப் பணத்தைக் கொண்டு எனக்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் செய்து வைத்தார். ஒரு 'ரேடியோ செட்'டும் வாங்கினார். விடுதலை பெற்ற பக்ஷிபோல் ஆனந்தமென்னும் ஆகாய வீதியில் நான் பறந்து விளையாடினேன். ஆனால், அம்மாவின் எண்சாண் உடம்பும் ஒரு சாணாகக் குறுகியது அவமானத்தால்.

என் பள்ளித் தோழியும், அத்தை மகளுமான லலிதா, அவள் கணவனுடன் பிறந்தகத்திற்கு வந்தவள் எங்கள் வீட்டிலும் சில தினங்கள் தங்கினாள். அவளுக்குக் கல்யாணமாகி இரண்டு வருஷத்திற்குப் பிறகு நான் அவளை இப்பொழுதுதான் சந்தித்தேன். மகிழ்ச்சியே உருவாய்த் துள்ளி விளையாடும் என் பால்யத் தோழியின் முகத்தில், இப்பொழுது அமைதியான ஆனந்தமும், தாய்மைக்குரிய கம்பீரமும் சேர்ந்து பொலிந்தது.

அன்று இரவு பக்கத்து அறையில் படுத்திருந்த தம்பதிகளின் சிரிப்பும் விளையாட்டும் என் மனப் புரட்சியை மேலும் கிளறி விட்டன. மறு நாள் காலை, வெகு நேரத்திற்குப் பின் எழுந்த நான் மெல்ல அவர்கள் அறையை நோக்கினேன். லலிதாவின் கணவர் கடுகடுத்த முகத்துடன், "அடியே! இங்கே பார்! காப்பியில் ஈயும், எறும்பும்! உனக்குக் கண் இருக்கா?" என்று கத்தினார்.

லலிதா சிரித்துக்கொண்டே, "எனக்குக் கண் இருக்கு; உங்களுக்குத்தான் ரொம்பச் சின்னதாக இருக்கு. எறும்பு சாப்பிட்டால் நல்லது!" என்றாள்.

கோபங் கொண்ட லலிதாவின் கணவர், "சீ! அதிகப் பிரசங்கி!" என்று சொல்லிக் கொண்டே அவள் கன்னத்தில் அறைந்தார். லலிதா கொஞ்சங்



கூட முகத்தைச் சிணுக்காமல், "என்ன, உங்களுக்கு எழுந்திருக்கும் பொழுதே இப்படிக் கோபம் வருகிறது?" என்று சொல்லிக் கொண்டே காப்பியை ஆற்றிக் கொடுத்தாள். கோபம் தணிந்த லலிதாவின் கணவர், "ஐயோ! உன் கன்னம் சிவந்து விட்டதடி!" என்றார், எனக்குச் சிரிப்பு வந்தது. அப்போது என் மனதில் பழைய சம்பவம் ஒன்று லேசாக மிதந்து வந்தது.

நான் லலிதாவைப் பார்த்த போது, "இப்படிக் கன்னம் சிவக்க அடிப்பவருடன் எப்படித்தான் குடித்தனம் நடத்துகிறாயோ?" என்றேன் குறும்பாக. அவள் சிரித்துக் கொண்டே, "அடிதடி, கோப தாபம், பிறகு கொஞ்சல் இவைகளே தாம்பத்ய வாழ்வின் ஜீவநாடிகள்; இவைகள் இல்லாத தாம்பத்ய வாழ்வைச் சதிபதிகள் ரசிக்க மாட்டார்களடி, கண்ணே!" என்றாள்.

என் மனத்தில் புரட்சியையும், புயலையும் உண்டாக்கி விட்டு லலிதா தம்பதிகள் ஊருக்குப் போய் விட்டனர். அவர்கள் தாம்பத்யத்தில் கனிந்த குழந்தை கண்ணனின் முகம் என் மனத்தை விட்டு அகலவேயில்லை.

சின்னஞ் சிறியவளாக இருந்த அன்று என் கணவரின் கைகள் என் கன்னத்தைத் தீண்டியபோது, 'சுரீர்' என்றது. அவர் கோப முகம் எனக்குப் பயத்தையே அளித்தது. ஆனால் இன்றோ?— யுவதிப் பருவத்தை அடைந்து இயற்கையின் ஆட்சிக்குட்பட்டிருக்கும் இன்றோ? — அவர் கரஸ்பரிஸத்தை நினைக்கும்பொழுதே என் உடல் சிலிர்க்கிறது; கோபத்தால் சிவந்த அவர் அழகிய முகத்தை நினைக்கும்பொழுதே என் உள்ளத்தில் எல்லையற்ற ஆனந்தம் பொங்குகிறது. இத்தகைய புது உணர்ச்சியால் என் உள்ளம் அலைப்புறும்போது என் கணவருக்கும், எனக்கும் மத்தியில் உள்ள பெரிய திரை நினைவிற்கு வந்தது.

எங்கள் மத்தியில் அத்திரை விழக் காரணமாய் இருந்தது யார்? நானா? அல்லது என் கணவரா? கணவனின் அடிகளைக் கற்கண்டு என்று எண்ணிப் பூரிக்கும் பரிபக்குவ வயதை அடையாத போது நான் செய்ததைத் தவறு என்று எப்படிச் சொல்வது? என்னை அடித்துப் பின் அணைத்துச் சிரிக்க வைக்கும் ஆற்றல் அறியா வயதில் என் கணவர் செய்ததைத்தான் தவறு என்று எப்படிச் சொல்வது?

இம்மாதிரிப் போராட்டங்கள் என் மனத்துள் நடந்துகொண்டே யிருந்தன. ஒவ்வொரு சமயம் 'கோ' வென்று கதறியழ வேண்டும்போல் இருக்கும். தலையணையில் என் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி யழுவேன். இம்மாதிரியே என் வாழ்வு முழுதும் இருந்து விடுமோ? — என்று எண்ணும் பொழுதே என் உடல் நடுங்கிற்று. என் கணவருக்குக் கடிதம் எழுதி அவர் மன்னிப்பைப் பெறுவது என்ற முடிவிற்கு வந்தேன்.

கடிதமும் எழுதினேன்; கடைசியில் அவர் பதிலும் வந்தது!

"உன் கடிதம் கிடைத்தது. கணவன் மனைவியை என்றும் ஆதரிக்கக் கடமைப் பட்டவன். அவ்விதம் ஆதரிக்க மறுக்கும் கணவனிடம் அவள் ஜீவனாம்சம் பெற மனைவிக்குச் சட்டமும் ஆதரவளிக்கிறது. ஆனால், கணவனை அன்பினால் ஆதரிக்கக் கடமைப்பட்ட மனைவி, அதை மறுக்குங்கால், அவள் அன்பினால் ஏற்படும் இன்பதுன்பங்களை ஜீவனாம்சமாகப் பெறக் கணவனுக்கு எந்தச் சட்டமும் ஆதரவளிக்கவில்லை! மனைவியின் அன்பை இழந்த கணவன், ஒன்று சன்யாசியாகி விடவேண்டும்; இல்லாவிடில் இழந்த அன்பை மீண்டும் பெற அவன் இன்னொரு பெண்ணின் கையைப் பற்றியாக வேண்டும். எல்லோருமே சன்னியாசியாகிவிட முடியாது. ஆகவே என் போன்றவர்கள் பின்பற்றக் கூடியது இரண்டாவது வழியே.

உன் தங்கை பாமா உன்னை வரவேற்கக் காத்திருக்கிறாள். வரும் திங்களன்று அவளுக்கு ஸ்ரீமந்தக் கலியாணம்! இவ்விஷயங்களைப் படித்ததும் உன் மனம் துன்பமடையும். ஆயினும் சென்று போனதை நினைத்துப் பயனில்லை. விஷயங்களை அறிந்த பின் உன் மனம் மாறினாலும் மாறலாம். ஆகையால் உனக்கு மூன்று தினங்கள் அவகாசம் தருகிறேன். வரும் ஞாயிறன்று மாலை ஆறு மணிக்கு அங்கு வருகிறேன். இவ்வளவிற்குப் பின் உன் தந்தையின் முகத்தில் விழிக்க எனக்கு இஷ்டமில்லை. ஆகையால் நீ என்னுடன் வரத் தீர்மானித்தால் புறப்படத் தயாராய் இரு. இல்லாவிடில் உன் முடிவை நீயே எனக்கு நேரில் தெரிவித்து விடு. என் அன்பும், ஆசியும் உனக்கு என்றும் உண்டு.

வேணுகோபாலன்."

கடிதத்தைப் படித்து முடித்தவள் அப்படியே சிலையாய் உட்கார்ந்து விட்டேன். என் தலையில் பேரிடி ஒன்று விழுந்த மாதிரி இருந்தது.

தவறு நேர்ந்து விட்டது; இனி என்ன தான் முட்டிக் கொண்டாலும் நேர்ந்தது நேர்ந்ததுதான். ஆயினும் என் உள்ளம் ஏனோ அலை புரண்டு தவித்தது. வேறு வழி யொன்றும் காணாமல் ஏங்கிற்று. கடைசியாகப் பெண்மணிகளுக்கே இயற்கையான சகிப்புத் தன்மையால் தாம்பத்தியத்தில் நேரும் அதிர்ச்சிகளைப் பொறுமையுடன் ஏற்கத் துணிந்தேன்.

அன்று என் பெட்டியை ஒழித்து, அதிலிருந்த அனாவசியமான சாமான்களை அப்புறப் படுத்தி, முக்கிய சாமான்களை எடுத்து வைத்துக் கொள்வதில் முனைந்திருந்தேன். அச்சமயம், "ருக்கு! ருக்கு!" என்று கூப்பிடும் என் தந்தையின் உற்சாகமான குரலைக் கேட்டு மெல்ல மாடிக்குச் சென்றேன். அப்பாவின் முகத்தில் ஆனந்தம் பொங்கிக் கொண்டிருந்தது. "ருக்கு! இப்பொழுதுதான் அவர்களுக்கு உன் சங்கீதத்தின் அருமை தெரிந்திருக்கிறது. இதோ பார்!" என்று தம் கையிலிருந்த 'வானொலி'யை என்னிடம் கொடுத்தார். அதில் நிகழ்ச்சிக் குறிப்பில் என் பெயரும் இருந்தது.

"அப்பா! நான் ரேடியோவில் பாடப் போவதில்லை!" என்றேன்.

அப்பாவின் முகத்தில் கலவரமும், சந்தேகமும் தோன்றியது. "என்ன அம்மா! சொல்கிறாய்?" என்றார் சற்று உரத்த குரலில்.

நான் துணிவுடன் விஷயங்களைச் சுருக்கமாக விளக்கினேன். விஷயங்களைக் கேட்டதும் அப்பா, கோபத்துடன் துள்ளி எழுந்தார். "என்ன அம்மா சொல்கிறாய்? அந்த அற்பப் பயலுடன், அந்தத் துரோகிப் பயலுடன் ..." என்று ஆரம்பித்தார். "போதும் அப்பா, நிறுத்துங்கள்! என்ன இருந்தாலும் அவர் உங்கள் மாப்பிள்ளை! என் கணவர்" என்று இடைமறித்துச் சொல்லும் பொழுதே, மணியும் ஆறு அடித்தது.

அதே சமயம் கீழே மோட்டார் ஹாரன் சப்தம்! என் உடல் சிலிர்த்தது. வேகமாகக் கீழே இறங்கியவள், மேல் படியில் நின்றிருந்த என் தாயின் மீது மோதிக் கொண்டேன். அம்மா என்னை அப்படியே தழுவிக் கொண்டாள். அப்போது அவள் முகத்தில் பிரதிபலித்த ஆனந்தம் விவரிக்கக் கூடியதல்ல.

காரின் கதவைத் திறந்து என் கையிலிருந்த பெட்டியை வாங்கிக் கொண்டார் அவர். நான் ஏறிக்கொண்டவுடன் காரும் புறப்பட்டது.

நாங்கள் வீட்டை யடைந்தபொழுது இரவு மணி பதினொன்றாகி விட்டதால் அவர் உத்தரவுப்படி பேசாமல் படுத்து விட்டேன். பிரயாண அலுப்பால் ஒருவாறு என் மனத்துன்பத்தை மறந்து தூங்கிப்போனேன்.

இரண்டு வீட்டுக்கு அப்பால் கேட்ட மேளச்சப்தம் தூக்கத்திலிருந்த என்னை எழுப்பிற்று. கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தேன். 'ஸ்ரீமந்தக் கல்யாணம்' என் நினைவிற்கு வரத் திடீரென்று என் உடம்பு கனத்தது. சொல்ல வியலாத வேதனையுடன் தலையைக் கையால் பிடித்துக்கொண்டு கண்ணை இறுக மூடிக்கொண்டேன். அச்சமயம், "ருக்கு! இன்னுமுமா தூக்கம்? எழுந்து வா, உனக்காக எல்லோரும் காத்துக் கொண்டிருக்கிறார்களே!" என்ற வண்ணம் என் கணவர் அங்கு வந்தார். நான் மெல்ல என்னைச் சமாளித்துக்கொண்டு எழுந்தேன்.

"அதோ பார்! மணப்பெண்! அவள் தான் உன் தங்கை பாமா!" என்று சொல்லி விட்டுச் சட்டென அப்பால் சென்று விட்டார் என் கணவர். ஒரு க்ஷணநேரம் என் கண்களையே என்னால் நம்பமுடியவில்லை. ஏனெனில், அப்போது பாமாவின் கழுத்தில் ஒருவர் (மணமகன்) மாங்கல்யதாரணம் செய்து கொண்டிருந்தார்! க்ஷணநேரத்தில் எல்லாம் எனக்கு விளங்கிற்று. அங்குள்ள யாவரும் என்னை அன்போடு வரவேற்று உபசரித்தனர். பாமா என்னை நமஸ்கரித்தாள். அவள் அழகிய விழிகள்-செய்ய விருந்த தவறுக்காக—மன்னிப்பு வேண்டி என்னை அன்புடன் நோக்கின.

ஜில்லென்ற ஸ்பரிசத்தால் என் சிந்தனைப் பிரயாணம் தடைப்பட்டது. என் கண்களைப் பொத்தியிருந்த கரத்தை மெல்ல விலக்கினேன். குறும்புப் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தார் என் கணவர்.

"உன் கடிதம் இன்னும் ஒருவாரம் பின்னால் வந்திருந்தால், பாவம்! பாமா உன் சாபத்திற்கு ஆளாகியிருக்க வேண்டும்" என்றார்.

"இருந்தாலென்ன? ருக்மணி, சத்யபாமாவாக இருந்து விட்டுப் போகிறோம்!" என்றேன் என் உள்ளத்தை மறைக்கும் கள்ளக் கோபத்துடன்.

அவர் சிரித்தார். "இருக்கலாம்; ஆனால் ருக்கு, இன்று உன் முகத்தில் உள்ள களையும் சோபையும் நேற்று வரை இல்லை" என்றார் அந்தச் சட்டக் கல்வி.

தோல்வியினாலும், வெட்கத்தினாலும் தலையைக் கவிழ்த்துக்கொண்டேன்.

# யாரோ அஜாக்கிரதையாகப் பேசுகிறார்—

....விரோதி வெகு சாமர்த்தியமாக பல தகவல்களை ஒன்று சேர்க்கிறான்.



அடுத்த யாரோ அல்லது அடுத்த யாரோ அந்த அஜாக்கிரதையாகப் பேசிய வார்த்தைகளால் இந்தியாவிலுள்ள பொது மக்களுக்குத் தேவையான ஆயிரக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் நஷ்டமாகின்றன; உயிர்களுக்கும் சேதம் ஏற்படுகிறது.

நம்முடனேயே இருக்கும் எதிரியின் ஏஜண்டுகளுடைய சாமர்த்தியத்தையோ, போர்முனையைப் பற்றியோ, வேடிக்கையாக எண்ணிவிடாதீர்கள். அவர்கள் சிறு சிறு தகவல்களைக் கொண்டே பிரமாதமான வேலைகளைச் செய்கிறார்கள். டெல்லியில் ஒட்டுக்கேட்கப்பட்ட டெலிபோன் செய்தி, பம்பாய் ரெயில்வே ஸ்டேஷனில் கிடைத்த பாதித் துண்டுக் கடிதம், கல்கத்தா ஹோட்டலில் தற்செயலாக கேள்விப்பட்ட சிதறிய இவைகளையெல்லாம் மிக சிரமப்பட்டு ஒன்று சேர்க்கிறார்கள். அதன் மூலம் பர்மாவில் ஒரு புதிய படையின் நடமாட்டம், அல்லது சாமான்களையிட்டு செல்லும் கப்பல் கூட்டம் புறப்படும் தேதி இவைகளை அறிய முடிகிறது.

**விரோதியின் பயங்கரச் செயல்களைப்பற்றி உஷாராக இருங்கள்.**

எதிரிக்கு உபயோகமாகும் எவ்விஷயத்தைப்பற்றியும் பேசுவதில்லை என்று உறுதிசெய்து கொள்ளுங்கள். துருப்பு நடமாட்டம், யுத்த சாமான்கள், கப்பல் போக்குவரத்து முதலியவற்றைப்பற்றி ஒன்றும் பேசாதீர்கள்.



இப்படிச் செய்வதன் மூலம் நீங்கள் கப்பல்களையும் கப்பலோட்டிகளின் உயிர்களையும் காப்பாற்றக் கூடும். நமது போக்கு வரவுப் பாதைகளைக் காப்பாற்றுவதுடன் பொது மக்களுக்குத் தேவையான பொருள்கள் பத்திரமாக வந்து சேருவதற்கும் உதவியளித்தவர்களாவீர்கள்.

**தேசியப் போர்முனை வெளியீடு.**

**நீங்கள் அப்படிச் செய்ய மாட்டீர்கள் என்பதை உறுதிப் படுத்துங்கள்.**

AAA 1542 TM

KALKI—29-4-1945



# ஆடல் பாடல்



[ ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் ]

குற்றாலத்திலிருந்து சென்னை 400 மைல் தூரம்.

திருவனந்தபுரத்திலிருந்து சென்னை 500 மைல் தூரம்.

சென்னையில் நடந்த ஒரு பரத நாட்டியக் கச்சேரிக்காக நான் குற்றாலத்திலிருந்து போயிருந்தேன்.

அதே பரத நாட்டியக் கச்சேரியில் அக்கிராசனம் வகிப்பதற்காகத் திருவனந்தபுரத்திலிருந்து பிரதம நீதிபதி திருப்புகழ் மணி ஸ்ரீ டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் வந்திருந்தார்கள்.

கச்சேரி முடியும் சமயத்தில் நான் திருப்புகழ் மணியைப் பார்த்துச் சொன்னேன்:—

"நான் குற்றாலத்திலிருந்தும் தாங்கள் திருவனந்தபுரத்திலிருந்தும் இந்தப் பரத நாட்டியக் கச்சேரிக்காக வந்தது பெரிய காரியமல்ல. தென்னாப்பிரிக்காவில் நாம் இருந்திருந்த போதிலும் இந்தக் கச்சேரிக்காகவே புறப்பட்டு வந்திருக்கலாம்!"

இவ்விதம் நான் கூறியதைத் திருப்புகழ் மணி மனப்பூர்வமாய் ஆமோதித்தார்கள்.

பிறகு, அவர்களது அக்கிராசன வாழ்த்துரையில், "இந்தக் குழந்தைகளின் அற்புத நாட்டியத்தைப் பார்த்த பிறகு என்னால் பேசவே முடியவில்லை; பாராட்டுவதற்கு வார்த்தைகளும் கிடைக்கவில்லை. அபிநய பாஷையினால்தான் பாராட்ட வேண்டியிருக்கிறது!" என்றார்கள். இதை நான் உற்சாகமாக ஆமோதித்தேன்.

தமிழ் வருஷப் பிறப்பு தினத்தன்று (13—4—45) மயிலை சங்கீத சபையில் நடந்தேறிய ஆனந்தி-ராதா அரங்கேற்றக் கச்சேரியின் முடிவிலேதான் இவ்விதமாக நாங்கள் பரிமாறிக் கொண்டோம்.

★

இனி, அரங்கேற்றக் கச்சேரி நடந்த விமரிசையைக் கொஞ்சம் கவனிக்கலாம்.

முதலில் சுத்த நடனமாகிய அலாரிப்பு, ஜதிஸ்வரம், வர்ணம் என்ற அம்சங்கள் நடைபெற்றன. (வர்ணத்தில் சாஹித்யம் கொஞ்சம் கலந்திருக்கும்.) இவற்றில் நடன உலகத்தின் விசாலமான பரப்பைக் காண்கிறோம். அந்த உலகம் அதிசயமான உலகம். மானிட தேகத்திலுள்ள உறுப்புகளோடு கால தத்துவம் இட தத்துவம் ஆகிய இரண்டும் கலந்து வந்து அற்புதமான உருவங்களைச் சிருஷ்டிக்கின்றன. நம்மவர்கள் இந்த உருவ சிருஷ்டிகளில் அபாரமாய் ஈடுபட்டவர்கள்.

சிதம்பரம் கோயிலின் கோபுரசிலைகளிலும் மண்டபத்துச் சுவர்ப் படங்களிலும் ஆயிரக்கணக்கான நடன உருவங்களைச் செதுக்கியிருக்கக் காணலாம். அநேகமாய் அவை சுத்த நடனங்களைச் சேர்ந்தவை.

சுத்த நடனங்களுக்கு (தில்லானா உள்பட) அற்புதம் கோபம் சோகம் முதலான உணர்ச்சிகள் வேண்டியதில்லைதான்.

ஆனாலும் தேக உறுப்புகளின் தொழிற்பாடுகளை நன்றாய் உள்ளூற அனுபவித்திருக்க வேண்டும். உள்ளத்தில் அனுபவியாத போது, தாளம் திருத்தமாய் இருக்கலாம்; பிடிகளும் முத்திரைகளும் திருத்தமாய் இருக்கலாம்; (இடைவிடாப் பயிற்சியால் இவைகளைச் சாதித்து விடலாம்;) ஆனால் லாகவம் நயம் கனிவு முதலிய அம்சங்கள் சித்தியாக மாட்டா. உள்ளத்தில் ஊறிய ஆனந்த அனுபவத்திலிருந்துதான் இவை சித்தியாக வேண்டும்.

ஆனந்தி - ராதா இருவருக்கும் மேல் சொன்ன லாகவம் கனிவு முதலான அம்சங்கள் அருமையாய்க் கைகூடியிருக்கின்றன.

★

பின்னர், அபிநய நடனம். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் வந்து அரங்க மேடையில் உட்கார்ந்து தோடி ராகத்தின் சொரூபத்தைக் கொஞ்சம் எடுத்துக் காட்டிவிட்டு, "தாயே யசோதா" என்ற பதத்தைப் பாட ஆரம்பித்தார். பாட்டானது உணர்ச்சி ரூபங்களோடு வந்து செவி வழியாக இதயத்துக்குள் பிரவேசித்தது. உல்லாஸ விளையாட்டோடு கூடிய ஆயர் மங்கை ஒருத்தி யசோதையின் முன் வந்து

வேடிக்கையாகப் புகார் சொல்லுவதைப் பார்க்கிறோம் - மனக் கண்ணில்தான்.

மனசு இப்படிப் பார்த்துக் கொண்டிருக்கும்போது. குழந்தை ராதா — பத்து வயசுள்ள குழந்தை — அபிநயம் பிடிக்க ஆரம்பிக்கிறாள். பாவ சங்கீதத்தின் மூலமாக உள்ளத்தில் தோன்றிய ஆயர் மங்கையானவள் கண்ணுக்கு முன்னாலே தோன்றி விடுகிறாள். சங்கீதமும் அபிநயமும் காலிலுள்ள சதங்கைகள் போடுகிற நிர்மானங்களும் சேர்ந்து நம்மை அப்படி அப்படியே அந்தந்த ரஸ பாவங்களில் இணித்து விடுகின்றன.

பாலன் அல்லடி உன்மகன்
ஜாலமாகச் செய்த தெல்லாம்
நாலுபேர் கேட்கச் சொல்ல
நாணமாகுதே!

என்ற அடிகளுக்கு ராதா பாவம் பிடித்தபோது அதன் விநயம் ஹாஸ்யம் எல்லாம் சபையோரை என்ன எல்லாமோ செய்து விட்டது; வியப்பு ஒரு பக்கம், சிரிப்பு ஒரு பக்கம், நாணமே ஒரு பக்கம் என்று ஆகி விட்டது சபையின் நிலைமை.

★

காம்போதியில் "பதறி வருகுது உருகுது என் ஆவி" என்ற பதம் வந்தபோது - உண்மையான சோகம் வந்து எங்களைப் பற்றிக்கொண்டது. இரண்டாவது தடவை பல்லவியைப் பாடியபோது ஆனந்தியின் அபிநயம் கலந்து கொண்டது.

பதறி வந்ததும் உருகியதும் பதைத்ததும் முருகன்மேல் காதல் கொண்ட நாயகியின் ஆவியா, அல்லது நம்முடைய ஆவிதானா என்று நினைக்கும்படி இருந்தது.

உள்ளத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியை அபிநயம் மூலமாக வெளியிடுவது — உணர்ச்சி குன்றாமல் வெளியிடுவது — ரொம்ப ரொம்பக் கஷ்டமான காரியம். அத்தகைய ஆற்றல் வாய்ந்த உத்தமக் கலைஞர்கள் உலகத்திலேயே குறைவுதான். ஆனந்தியை அந்த வர்க்கத்தில் சேர்க்க வேண்டும்.

ஆனந்தி நடித்துக் காட்டிய பதங்களில் ஒவ்வொரு அம்சத்திலுமே மேலே சொன்ன உண்மை விளக்கம் வெகு துலாம்பரமாய் அமைந்திருந்தது.

ஒரு பாவத்திலிருந்து அடுத்த பாவத்துக்கு — நேர் மாறான பாவத்துக்குமே — போகும்போது, கண் இமைப்பதற்கு முன்னேயே உணர்ச்சி மாறிவிடும்; அதோடு பாவமும் மாறிவிடும். கண்கட்டி வித்தைதான் அது.

★

ஒரு விஷயம்: பத்திரிகைக் காரியாலயத்தில் நடைபெறும் ஒரு முக்கியமான வேலைப்பாடு உண்டு.

எழுத்தாளர்கள் எப்படி எப்படி எல்லாமோ எழுதி அனுப்புவார்கள். விஷயங்கள் முன் பின்னாக மாறிக் கிடக்கும். வேண்டாதபடி பெருக்கியோ குறுக்கியோ அமைப்பில்லாமல் கிடக்கும். எலி யானைபோல் இருக்கும்; யானை எலியாய் ஒடுங்கிக் கிடக்கும். அவைகளை உருவாக்குவதற்கு வெட்டித் தட்டி எவ்வளவோ வேலை செய்ய வேண்டும். அப்படி வேலை செய்வதற்கு 'எடிட்' செய்கிறது என்று பெயர்.

'எடிட்' செய்கிற வேலை பத்திரிகையோடு நிற்கவில்லை. ஆசிரியரது கத்திரிகளும் கத்திகளும் பரத நாட்டியத்திலும் வேலை செய்திருப்பதை அன்று கண்டோம்.

'வர்ணம்' என்று நாட்டியத்தில் ஒரு பகுதி. அது வந்துவிட்டால்த் தொலைந்தது காரியம். ஒன்றரை மணி நேரம் நடன பாத்திரத்தைச் சித்திரவதைக்குள்ளாக்கிவிடும். பார்க்க வந்தவர்களும் அந்த வதைக்கு உள்ளாக வேண்டியதுதான்.

நாம் பார்த்த வர்ணத்திலோ 'எடிட்' வேலை தாராளமாய் நடந்திருந்தது. அரை மணி நேரத்துக்குள் வர்ணம் சுருக்கப் பட்டிருந்தது. இந்தச் சேவைக்குச் செலுத்த வேண்



டிய நன்றியை உடனடியாகச் செலுத்திவிட வேண்டியதுதான்.

கைங்கரியம் இதோடு நிற்கவில்லை. வர்ணத்துக்கான ஜதி அம்சங்களைக் குழந்தைகள் ஒன்று விட்டு ஒன்று மாறி வந்து ஆடிக் காட்ட வகை செய்திருந்தது. இந்த 'உத்தி' காரணமாக ஒவ்வொரு அம்சமும் புதிய வேகமும் சாயலும் அமைந்து வந்தது. பார்ப்பதில் சோர்வே ஏற்படவில்லை.



★

குழந்தை உள்ளத்தின் தத்துவத்தையும் சக்தியையும் கண்டு அன்பும் ஆதரவும் காட்டி நடனக் கலையின் நுட்பங்களையும் நயங்களையும் அந்தக் குழந்தைகளின் உள்ளத்தில் புகுத்திய நடன கலை ஆசிரியர் வழுவூர் ராமய்யாப் பிள்ளை அவர்களின் திறத்தைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

ஸ்ரீ ராமய்யாப் பிள்ளை நடன உலகத்துக்கு ஒரு அரிய நடன கதி ரூபத்தைப் புதிதாகவே சிருஷ்டி செய்து கொடுத்திருக்கிறார். பாரதியாரின் "ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே" என்ற பள்ளுப் பாடலுக்குத் தான ஜதிகள், அடைவுகள், அபிநயங்கள் எல்லாவற்றையும் அற்புதமாகச் சேர்த்திருக்கிறார். அவற்றுக் கெல்லாம், ஆனந்தியும் ராதாவும் உல்லாசமாயும் உணர்ச்சியோடும் ஆடி உருவம் கொடுத்த போது, சபையோர் பட்ட பாட்டை இன்னதென்று சொல்ல முடியாது; அவர்களும் எழுந்து ஆடாததுதான் பாக்கி.

"உழவுக்குந் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம்"

"பூமியில் எவர்க்கும் இனி
அடிமை செய்யோம்"



என்பவை போன்ற தற்கால மக்களின் உள்ளங்களில் குடிகொண்டிருக்கும் லக்ஷியங்கள், ஆட்டத்தோடும் அபிநயத்தோடும் கலந்து வந்த போது, சபையிலே உற்சாகம் கரை புரண்டு விட்டது. புதிய நடனச் செல்வம் ஒன்று நமக்குக் கைமேல் கிடைத்து விட்டது என்பதில் சந்தேகமில்லை.

கடைசியாக, வசந்தா ராகத்தில்,

நடனமாடினார் வெகு
நாகரீக மாகவே
கனகசபையில் ஆனந்த
நடனமாடினார்

என்ற தெய்வப் பாடல்;—தெய்வ நடனமுந்தான்.

சபை இந்த உலகத்தை விட்டு எல்லாத் தத்துவங்களையும் கடந்த ஆனந்த உலகத்துக்கே போய் விட்டது. சாமானியமாகக் கிடைக்கக்கூடிய, அநுபவமா அது!



ஆனந்தியும் ராதாவும் சின்னஞ் சிறு குழந்தைகள் தானே; அவர்களுக்கு எப்படி உண்மையான உணர்ச்சி அநுபவங்கள் ஏற்படக் கூடும்?—என்று கேட்கத் தோன்றுவது இயல்பு.

இதற்குப் பதில், குழந்தைகளின் தொண்டுக்காகவே தம் வாழ்நாளையெல்லாம் செலவழித்தவரான மாண்டிசோரி அம்மையார் சொல்கிறார். நம்மைப் பார்த்துத்தான் சொல்கிறார்:—

"நீங்கள் குழந்தைகளுக்கு ஒன்றும் சொல்லிக் கொடுத்துவிட முடியாது. உங்களுக்கு அவ்வளவு விஷயம் தெரியாது. ஆனால் கற்றுக் கொள்ளக்கூடிய சக்தி உங்களுக்கு ஏதேனும் இருந்தால், நீங்கள் குழந்தைகளிடமிருந்து கொஞ்சம் கற்றுக் கொள்ளலாம்!"

இது உண்மையிலும் உண்மை என்பதைப் புது வருஷப் பிறப்பன்று குழந்தைகள் ஆனந்தியும் ராதாவும் நிரூபித்து விட்டார்கள்.

## நாமக்கல் கவிஞர் நிதி

தஞ்சை ஜில்லாவில் சிறந்த தேச பக்தர்களில் ஒருவரான ஸ்ரீ ஆர். எம். கோவிந்தசாமி செட்டியார் அவர்கள் மேற்கண்ட நிதிக்காக ரூ. 116 வசூலித்து அனுப்பினார்கள். நன்கொடை யளித்தவர்கள்: பூண்டி ஸ்ரீ ஏ. கிருஷ்ணசாமி வாண்டையார் ரூ. 101. கும்பகோணம் டாக்டர் மகாலிங்கம் ரூ. 15. ஆக ரூபாய் 116-ம் நிதியின் பொக்கிஷதார் ஸ்ரீ வை. கோவிந்தனுக்கு அனுப்பி வைக்கப்பட்டது.



உதவிக்

கச்சேரி செய்ய

எம். எஸ்.

# பம்பாய்க்கு

விஜயம் செய்கிறார்!

# தென்னிந்திய கல்வி சங்க பள்ளிக்கூடக் கட்டிட நிதிக்காக

5-5-1945 சனிக்கிழமை இரவு 8-30 மணிக்கு

மாதுங்கா - கிங்க்ஸ் சர்க்கிள் - இந்தியன் ஜிம்கானா கிரௌண்டில் பிரத்யேகமாக அமைக்கப்பட்டிருக்கும் பந்தலில்

★

| | | |
|---|---|---|
| ஸ்ரீமதி M. S. சுப்புலக்ஷ்மி | ... | பாட்டு |
| தஞ்சாவூர் ஸ்ரீ T. D. சங்கரய்யர் | ... | பிடில் |
| கல்பாத்தி ஸ்ரீ ராமானுஜன் | ... | மிருதங்கம் |
| மதராஸ் ஸ்ரீ வேணு நாயக்கர் | ... | கஞ்சிரா |
| ஆலங்குடி ஸ்ரீ ராமச்சந்திரன் | ... | கடம் |

டிக்கட்டுகள் விபரம்:

ஆதரவாளர்கள்: ரூ. 100/: ரிஸர்வ் வகுப்பு ரூ. 50/:

முதல் வகுப்பு ரூ. 25/: இரண்டாம் வகுப்பு ரூ. 10/: மூன்றாம் வகுப்பு ரூ. 5/:

(ஸ்திரீகளுக்கும், குழந்தைகளுக்கும் ரூ. 3/: டிக்கெட்டும் உண்டு.)

டிக்கெட்டுகள் கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்:

வெங்கடேஸ்வரய்யர், மதராஸ் பிராமின் ஹோட்டல், மாதுங்கா.

தென்னிந்திய கல்விச் சங்கம், மாதுங்கா.

பாரத் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஆபீஸ், போர்ட்.




### என்ன கருணை!

ஒரு பெரிய சமாராதனையில் சாப்பிட்டுக் கையலம்பியதும், ஒரு கிழவர் இலைகளை மூன்று முறை பிரதட்சணம் வந்தார். பந்தியிலுள்ளவர்கள் அவரை ஆச்சரியத்துடன் நோக்கலானார்கள்.

"ஆஹா! உன் தாராளமே தாராளம்! குழம்பு, ரஸம், பாயஸம், மோர் இவ்வளவுக்கு நீ இருந்து, கையலம்புவதற்குக்கூட இருப்பதென்றால் உன் கருணை சொல்லி முடியாது; போ! தாயே பாகீரதி!" என்று கிழவர் பரவசத்தில் மொழிந்தார்.

—ஜி. நாகநாதன்.



### சில்லறை விஷயம்

ஒரு மளிகைக் கடையில் ஒருவன் செட்டியாரை அரைமணி நேரமாக நச்சரித்துக் கொண்டிருந்தான். கடையில் கூட்டமோ அதிகமாயிருந்தது.

செட்டியார்:—தம்பி, இப்போ ஒண்ணும் நச்சரிக்காதே. ஏதாவது சில்லறை விஷயமாக இருந்தால் சொல்லு. இல்லாவிட்டால் பிறகு வா!

பையன்:—ஆமாம், செட்டியாரே! சில்லறை விஷயந்தான். ஒரு பத்து ரூபாய்க்குச் சில்லறை வேணும். அதற்காகத்தான் இத்தனை நேரமாய் நிற்கிறேன்.

—ஆர். பிச்சை.



### கண்டுகொண்ட விதம்!

வக்கீல்:—அந்த ஸ்திரீ உனக்குப் பதினைந்து அடி முன்னால் நடந்ததாகவும் சொல்கிறாய்; அவள் முகத்தை நீ பார்க்கவேயில்லை என்றும் சொல்லுகிறாய். ஆனால் அவள் மிகவும் அழகாய் இருந்தாள் என்று உனக்கு எப்படித் தெரியும்?

சாக்ஷி:—ஏன் தெரியாதுங்க? எதிரிலே அவளைப் பார்த்துக்கொண்டே வருகிறவர்கள் முகத்தையெல்லாம் நான் பார்த்துக் கொண்டேதானே வந்தேன்? அதிலிருந்து கண்டு கொள்ள முடியாதுங்களா?

—மைதிலி.

### அம்பியின் சமர்த்து

ஊருக்குப் போகும் மாமா அம்பிப் பயலிடம் ஒரு இரண்டு ரூபாய் நோட்டையும், ஒரு ரூபாய் வெள்ளி நாணயத்தையும் காட்டி, "அடேய், உனக்கு இந்தப் பணம் வேண்டுமா, அல்லது இந்தக் காகிதம் வேண்டுமா?" என்று கேட்டார்.

அம்பிப்பயல் (நாலு வயது):—மாமா, அந்தக் காசை இந்தக் காகிதத்தில் வைத்து மடித்துக் கொடு, மாமா!

—எஸ். எஸ். வி.



### பலே யோசனை!

கான்ஸ்டேபிள்:—வீட்டிலே பெட்டிச் சாவி காணாமல் போயிடுத்தாம். என்ன செய்கிறதுன்னு அம்மா 'டெலிபோன்'லே கேக்கறாங்க?

இன்ஸ்பெக்டர்:—செய்கிறது என்ன? கைதி நெம்பர் 49 ஐ அழைச்சண்டு போய்ப் பெட்டியைத் திறக்கச் சொல்லு.

—எம். பி. துரைசாமி.



### நல்ல யோசனை

மனைவி:—இன்று லீவு நாளாயிற்றே! சாவகாசமாய் பீரோ, இரும்புப் பெட்டி முதலியவைகளை நகர்த்தி அறைகளைச் சுத்தம் செய்யலா மென்று சொல்லியிருக்கும் போது இன்றைக்குப் பார்த்து



விருந்தாளியைச் சாப்பிடக் கூட்டி வந்திருக்கிறீர்களே?

கணவன் (மெதுவாக):—அடி அசடே, அது தெரிந்துதான் இவரைக் கூப்பிட்டு வந்தேன். பீரோ, இரும்புப் பெட்டி முதலியவைகளை யெல்லாம் கூலி ஆள் இல்லாமலே இவரைக் கொண்டே நகர்த்தி விடலாமே!

—எஸ். ஹேமலதா.

# ஏழையின் குற்றம்

விந்தன்

சித்திரம், சிற்பம் முதலிய கலைகளைச் சிலர் தங்கள் குல வித்தையாகக் கொண்டிருக்கிறார்களல்லவா? அதுபோல் கூலிப் பிழைப்பைத் தன் குல வித்தையாகக் கொண்டிருந்தான் சின்னசாமி. அவன் அப்பன், பாட்டன், அந்தப் பாட்டனுக்குப் பாட்டன் எல்லாம் சீதாராமச் செட்டியாரின் முன்னோர்களிடம் பரம்பரையாகவே கூலி வேலை பார்த்தவர்கள்.

செட்டியார் கடைக்கு வந்து இறங்கும் அரிசி மூட்டை, சர்க்கரை மூட்டை முதலியவைகளை யெல்லாம் சின்னசாமி கடை வாசலிலிருந்து தன் முதுகில் சுமந்து கொண்டுபோய்க் கடை உள்ளில் அடுக்குவான். மூட்டைக்குக் காலணா வீதம், எந்தக் காலமாயிருந்தாலும் சரி — அதாவது, யுத்தக் காலமாயிருந்தாலும் சரிதான்; சமாதானக் காலமாயிருந்தாலும் சரிதான்— எண்ணிக் கொடுத்து விடுவார் செட்டியார். ஆனால் என்றைக்காவது ஒரு நாள் சின்னசாமி அறுபத்து நாலு மூட்டைகளுக்கு மேல் தூக்கி அடுக்கி விட்டு, ஒரு ரூபாய்க்கு மேல் கூலி வாங்க வந்து விட்டால் செட்டியாரின் கண்களிலிருந்து ஏனோ இரண்டு சொட்டுக் கண்ணீர் கீழே விழும்.

இந்தத் துக்க நிவர்த்திக்காக, அவன் கூலியிலிருந்து திருப்பதி தேவஸ்தானத்தின் தர்ம உண்டிக்கென்று செட்டியார் இரண்டணாவைப் பலவந்தமாக எடுத்துக் கொள்வார். "இக லோகத்தில்தான் அவன் தன்னுடன் சமத்துவமாக வாழா விட்டாலும், பரலோகத்திலாவது வாழட்டுமே!" என்பது செட்டியாரின் பரந்த நோக்கம்!

வழக்கம் போல் அன்றும் இரவு பத்து மணிக்குப் பிறகு, "நான் போய் விட்டு வரேனுங்க" என்றான் சின்னசாமி.

"என்னடா, இத்தனை சீக்கிரம்?"

"இனிமேத்தான் என் கூலியை வாங்கிக்கிட்டுப் போய் ஏதாச்சும் வாங்கிக் கஞ்சி காய்ச்சிக் குடிக்கணும். அவ வேறே காத்துக்கிட்டுக் கிடப்பா; குழந்தைங்க வேறே அழுதுக்கிட்டு இருக்கும்!"

"அதற்கு நீ வேலை பார்க்கக் கூடாது; வீட்டிலேயே அடைந்து கிடக்கணும்!"

"கோவிச்சுக்காதீங்க, சாமி! இன்னும் ஏதாச்சும் வேலையிருந்தாச் சொல்லுங்க; செய்து விட்டுப் போறேன்!"

"சரிதான்; இந்த அரிசி மூட்டையை எடுத்துக்கிட்டுப் போய் நம்ம வீட்டிலே போட்டு விட்டுப் போ!" என்று சொல்லி அன்றையக் கூலி ஆறணாவை எடுத்து அவனிடம் கொடுத்தார் செட்டியார்.

இப்படிக் கூலி கொடுக்கும்போதெல்லாம் செட்டியார் தினசரி தம் வீட்டு வேலை ஏதாவதொன்றைச் சின்னசாமிக்கு இடுவது வழக்கம். இந்த வேலைகளுக்குக் கூலி கிடையாது; கூலி கொடுக்கும் வேலைக்கு இவையெல்லாம் 'கொசுறு' வேலைகள்!

*

செட்டியார் ஜன்மம் எடுத்துத் தாம் விரும்பிய எத்தனையோ காரியங்களைச் சாதித்துக் கொண்டார். ஆனால் ஒரே ஒரு காரியம் மட்டும் கைகூடவில்லை. அதாவது, தம்முடைய பெயர் வெறும் 'சீதாராமச் செட்டியார்' என்றிருப்பதை விட, 'ராவ் பகதூர் சீதாராமச் செட்டியார்' என்று இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று அவர் அல்லும் பகலும் அனவரதமும் கனவு



கண்டு கொண்டு வந்தார். ஆனால், அதற்கு வேண்டிய முயற்சிகள் செய்வதற்குப் போதிய பணம் இல்லாமலிருந்தது.

இந்தக் குறையையும் நிவர்த்தி செய்வதற்கு யுத்தம் என்று ஒன்று வந்து சேர்ந்தது. தான் மட்டும் வந்தால் போதாதென்று அது 'கட்டுப்பாடு' என்றொரு தோழனையும் தன்னுடன் கூட்டிக்கொண்டு வந்து சேர்ந்ததல்லவா? அதை வியாஜமாக வைத்துக் கொண்டு செட்டியார் தம் கடையைக் 'கறுப்பு'க் கடையாக மாற்றி விட்டார்.

'கறுப்பு' வியாபாரத்தில் அவருடைய பணப் பஞ்சம் இருந்த இடம் தெரியாமல் பறந்தது. முகத்திலும் அலாதி களை வீசிற்று. பெரிய மனிதர்களின் சிநேகிதமும் கிடைத்தது. அப்புறம் சமயம் நேரும் போதெல்லாம் கூட்டம் கூட்டிக் 'கூச்சல்' போட்டார். அவருடைய 'கூச்ச'லைக் கேட்டுக் கரகோஷம் செய்ய ஒரு சிறு கும்பலும் சேர்ந்தது. அப்புறம் கேட்க வேண்டுமா? தாலுகா போர்டு மெம்பரானார்; பாங்கின் டைரக்டரானார்; பல கம்பெனிகளின் கூட்டு முதலாளியானார்; யுத்தக் கமிட்டியின் தலைவரானார்; கவர்னர் துரையை அடிக்கடி நெருங்கினார். இதனாலெல்லாம் அவருடைய 'கறுப்பு மார்க்கெட்' விஷயம் அதிகாரிகளின் காதில் விழாமலே போயிற்று; தப்பித் தவறி விழுந்தாலும் அந்த விஷயம் அவர்கள் காதுக்குக் கேட்காமலே போயிற்று!

★

செட்டியாரின் விஷயம் இப்படியென்றால் சின்னசாமியின் விஷயம் வேறாயிருந்தது. அவனுக்கு அஞ்சலை என்றொரு தங்கை. பிரசவத்துக்காக அவள் தன்னுடைய அண்ணன் வீட்டுக்கு வந்திருந்தாள். பிரசவமாகி ஆறு மாதங்களாகி விட்டன. அவள் கணவன் தன் மனைவியை அனுப்பி வைக்கும்படி அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். தாயும் பிள்ளையுமாக வெறுமனே எப்படி அனுப்பிவைப்பது? அந்தக் குழந்தையின் கால்களுக்கு ஒரு ஜதை வெள்ளிக் காப்புகளாவது வாங்கிப் போடவேண்டும்; அஞ்சலைக்கு ஐந்து ரூபாயிலாவது ஒரு புடவை எடுத்துக் கொடுக்க வேண்டும். இவைகூட இல்லாமல் சென்றால் அஞ்சலையின் மாமியார் சும்மா இருப்பாளா?



ஆனால் அவற்றிற்கெல்லாம் குறைந்தது பத்து ரூபாயாவது வேண்டுமே!—இதுதான் சின்னசாமியின் தற்சமயக் கவலை, லட்சியம், மனோரதம், எண்ணம், ஆசை எல்லாம்!

இந்தக் குறையை நிவர்த்தி செய்து கொள்வதற்காக அவன் என்னவெல்லாமோ யோசனை செய்து, கடைசியில் ஒரு நிர்மானத்துக்கு வந்து விட்டான். அந்த நிர்மானத்தின்படி, தான் மாலை வேளையில் வழக்கமாகத் தேநீர் அருந்தும் 'டீ' கடைக்குச் சென்று, "என்ன, நாயர்! சர்க்கரை ஏதாச்சும் வேணுமா?" என்று கேட்டான்.

"இருந்தா இப்பவே கொடு, அப்பேன்! வீசை ஒரு ரூபாய்க்கு வாங்கிக்கிறேன்!"

தினசரி ஒரு வீசை சர்க்கரை; விலை ஒரு ரூபாய்; பத்து நாட்களுக்குக் கொண்டு வந்து கொடுத்தால் பத்து ரூபாய்; அடே, அப்பா! போதுமே, நமக்கு!

★

சின்னசாமி, தன் தங்கை அஞ்சலையின் வாழ்க்கை நலனுக்காகத் திருட்டுத் தொழிலில் பிரவேசித்து அன்று பத்தாவது நாள். பொழுது விடிந்ததும் பல்லைத் துலக்கிக் கொண்டு, நெற்றியில் 'சிவனே!' என்று விபூதி அணிந்து கொண்டான். கிழக்குத் திக்கை நோக்கி ஒரு முறை கைகூப்பி விட்டு, அடுப்பங்கரைக்குச் சென்று உட்கார்ந்தான். பழைய சாதம் இருந்த பானையை எடுத்துக்கொண்டு, அவனுக்கு எதிரே வந்து உட்கார்ந்தாள் அவன் மனைவி. அவள் கையிலிருந்த இரண்டு பச்சை மிளகாய்களைத் தன் இடது கையில் பெற்றுக்கொண்டான் சின்னசாமி. அந்த மிளகாய்கள்தான் ஏழைச் சின்னசாமிக்குப் பருப்பு, நெய், பொரியல், அவியல், கூட்டு, எல்லாம்! கையில் பழைய சாதத்தைப் பிழிந்து வைத்துக்கொண்டே, "மறந்துட்டேன்; நேத்து ஒரு கடிதாசு வந்திச்சு. அதிலே, 'பொங்கலுக்கு இன்னும் நாலு நாள்தான் இருக்குது. அனுப்பினா அதுக்குள்ளே அஞ்சலையை அனுப்புங்க, இல்லாட்டி அந்தப் பெண்ணே வேணாம்!'னு எழுதியிருக்காங்களாம்!" என்றாள் அவன் மனைவி.

அதற்காக ஏற்கனவே திருட்டுச் சர்க்கரை வியாபாரத்தில் இறங்கியிருப்பதைப்

பற்றி அவன் தன் மனைவியிடம் அதுவரை ஒன்றுமே சொல்லவில்லை. அவளிடம் அதைச் சொல்ல அவனுக்கே வெட்கமாயிருந்தது. இப்பொழுதும் அதை மனதில் வைத்துக் கொண்டே, "நாளைக்கு எப்படி யாச்சும் அனுப்பி வச்சுடலாம்!" என்றான்.



"கிட்டு! குதிரை ஓடுமா, நடக்குமா?"

"அது குதிரை இருக்கும் இடத்தைப்பொறுத்தது ஸார்!"

"அப்படி என்றால்?"

"அது, வீட்டை விட்டு வெளியே போகும்போது நடக்கும்; வெளியிலிருந்து வீட்டுக்குத் திரும்பும்போது ஓடும்!"

செட்டியாரின் திருட்டு வியாபாரத்தை எத்தனையோ நாட்களாகக் காத்து வந்தவரும், சின்னசாமியின் திருட்டுத் தொழிலுக்கு ஒன்பது நாட்கள் துணையாயிருந்தவருமான அந்தக் கடவுள், பத்தாவது நாள் மட்டும் பணக்காரரான செட்டியாரை விட்டு விட்டு, ஏழைச் சின்னசாமியை ஏனோ காட்டிக் கொடுத்து விட்டார். கடைசியில் என்ன? மாட்சிமை தங்கிய மன்னர்பிரானின் நீதிநெறியைக் காப்பாற்றி வரும் போலீஸாரிடம் அவன் ஒப்படைக்கப் பட்டான்.

அவன் மனைவி மக்களும், தங்கையும் இந்தச் செய்தியை முதலில் நம்பவே இல்லை. என்றைக்கும் திருடாதவன், இன்று திருடினான் என்றால்? — ஆனால் அவர்கள் நம்பினாலென்ன, நம்பாவிட்டாலென்ன? சின்னசாமியை நம்பிய அவர்கள் நடுத்தெருவில் நிற்க நேர்ந்து விட்டது.

★

இந்தச் சம்பவம் நடந்து ஒரு வாரத்திற்குப் பிறகு ஒரு நாள், செட்டியார் தினசரியைப் பிரித்து, அதில் வெளியாகியிருந்த புதுவருஷப் பட்டங்களை ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய ஆசை நிராசையாய்ப் போய்விடவில்லை. அவருக்கும் 'ராவ்பகதூர்' பட்டம் கிடைத்திருந்தது.

அந்தச் செய்திக்குப் பின்னாலிருந்த இன்னொரு செய்தியும் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அது, சின்னசாமிக்கு ஆறு மாதம் சிறைவாசம் கிடைத்த செய்திதான்!

பணம் படைத்த செட்டியார் செய்ததும் குற்றம்தான்; ஏழை சின்னசாமி செய்ததும் குற்றம்தான்! — ஆனால் பலன்?

# சொன்னது சொன்னபடி!



**ஸோமாஸ்**

"என்ன மிஸ்டர் ராஜகோபாலன், நான் எப்படிச் சொல்லுகிறேனோ அப்படியே நீர் எழுதிக்கொள்ள வேண்டும். தெரியுமா? ஏதாவது அதிகப் பிரசங்கித்தனம் செய்தீரோ, நான் அடுத்த நிமிஷமே உமக்குச் சீட்டுக் கொடுத்துவிடுவேன்!" என்று பிரபல லேவாதேவிக்காரரான அரு. அள. பழ. ராம. பழனியப்ப செட்டியார் சிம்ம கர்ஜனை போன்ற குரலில் சொன்னார்.

"அப்படியே; நீங்கள் என்ன சொல்லுகிறீர்களோ அதையே எழுதுகிறேன்" என்று மிகவும் வணக்கத்துடன் கூறிவிட்டு, ராஜகோபாலன் அவர் வாயைப் பார்த்துக் கொண்டே பேனாவும் கையுமாக உட்கார்ந்தான். செட்டியார் நீண்ட காலமாகத் தமக்குப் பாக்கிவைத்திருக்கும் ஒருவருக்கு எழுத வேண்டிய விஷயத்தைச் சொல்லிக் கொண்டே போனார். செட்டியார் அவனைப் பல முறையும் திருப்பித் திருப்பிக் கொடுத்த கடனைக் கேட்டு அலுத்துப் போயிருந்தார். அந்த அலுப்புடன்தான் கடிதத்தையும் சொன்னார். ராஜகோபாலன் அவர் சொன்னபடி ஒரு சிறிதும் விஷயங்களை மாற்றாமல் எழுதினான். அந்தச் சமயத்தில் செட்டியாருக்கு ஒரு அவசரத் தந்தி வரவே அவர் உடனே வெளியூருக்குப் புறப்பட வேண்டியதாயிற்று.

"ராஜகோபாலன், நான் சொல்லிய படியே எழுதியிருக்கிறீர் அல்லவா? சரி, எனக்கு ரயிலுக்கு நாழிகையாகி விட்டது. எனக்காக நீர் கையெழுத்துப் போட்டு அனுப்பிவிடும்!"

"சரி!" என்றான் ராஜகோபாலன்.

மறுதினம் அந்தப் பழைய கடன்காரனுக்குப் பின்வரும் கடிதம் கிடைத்தது.

மிஸ்டர் கோணாசலம் அவர்களுக்கு,

அன்புள்ள ஐயா,

**அன்பு வேறு வேண்டுமோ இவனுக்கு?**

தாங்கள் என்னிடம் கடன் வாங்கி இரண்டு வருஷங்களுக்குமேல் ஆகிவிட்டன என்பதை ஞாபகப் படுத்துகிறேன்.

**ஞாபகப்படுத்தி என்ன பிரயோஜனம்! அந்த அயோக்கியன்தான் எதற்கும் அசைந்து கொடுக்கிற வழியாயில்லையே!**

நான் எழுதிய இரண்டு கடிதங்களுக்கும் நீங்கள் மௌனம் சாதித்து விட்டீர்கள். வட்டியும் முதலுமாக நீங்கள் கொடுக்க வேண்டியது ரூபாய் ஆயிரத்து ஐந்நூறு.

**எங்கே கொடுக்கப் போகிறான்! அசல் வந்தாலே பெரிய காரியம்.**

இந்த மாதக் கடைசிக்குள் வட்டியும் முதலுமாகப் பணத்தைச் செலுத்தா விட்டால் உமது பேரில் கோர்ட்டில் சந்தி சிரிக்கும்.

**ஆமாம். அந்த எமகாதகன் இதற்கெல்லாம் அசைவானா? கோர்ட்டுக்குப் போனால் மட்டும் பணம் வந்துவிடுமா? நமக்குத்தான் தண்டச் செலவு.**

கௌரவமுள்ள மனிதரா யிருந்தால் உடனே கடனையடைக்க ஏற்பாடு செய்யும்.

**கௌரவமுள்ள மனிதனா யிருந்தால் கடன் ஏன் வாங்குகிறான்? கடன் வாங்கினவன் கூட எக்கேயாவது திருப்பித் தருவது உண்டா? நிச்சயம், நாமம்தான் சாத்தப் போகிறான்! கோர்ட்டு, கீர்ட்டு என்ற சொல்லுகெல்லாம் அவனிடம் நடக்காது.**

இதுதான் கடைசிக் கடிதம். இதற்கு அடுத்தது வக்கீல் நோட்டீஸ்தான்!

**ஆமாம். ஒவ்வொரு தடவையும் கடைசிக் கடிதம்தான். இதை மாத்திரம் பிரமாதமாக என்ன கவனித்து விடப்போகிறான்? எனக்கு நம்பிக்கையே யில்லை! ஹும்!**

தங்கள்,

..........................





மேல் நாட்டு ஹோட்டல் ஒன்றில் பின்வருமாறு ஓர் அறிக்கை காணப்படுகிறதாம்:—"ஹோட்டல் ஊழியர்களை அன்பாக நடத்துங்கள். வாடிக்கைக்காரர்களை விட ஹோட்டல் ஊழியர்கள் கிடைப்பது இக்காலத்தில் கஷ்டமாக இருக்கிறது."

# ஹே, அனுராதா!

நாடோடி

ஹே! அனுராதா!......ஏ, உன்னைத்தான்!......என்ன, அப்பொழுது பிடித்துக் கத்துகிறேன், காது கேட்கவில்லையா, என்ன?......ஏ, அனு! உன்னைத்தான்!... ...அட, கழுதை! அனு என்று கூப்பிட்டால்தான் திரும்பிப் பார்ப்பாயோ! இந்தா, கையில் இருக்கும் பத்திரிகையைச் சற்று அப்பால் வைத்து விட்டு, என்னைப் பார்!......என்ன, அந்தப் பத்திரிகையைக் கிழித்து விட்டுத்தான் மறு காரியமோ?... ...சரி, கிழி! நீ கிழித்து முடிகிற வரையில் காத்திருக்கிறேன் ...... என்ன, கிழித்து முடித்தாகி விட்டதா? சரி, என்னைப் பார்!

நேற்று நானும், உன் அம்மாவும் மாறி மாறிச் சுருதியை உயர்த்திக்கொண்டே பேசிக்கொண்டு போனோமே, ஞாபகம் இருக்கிறதா?......என்ன தலையை ஆட்டுகிறாய்! ஞாபகம் இல்லை? முதலில் நான் சமையலுக்கு மாத்திரம் காது கேட்கும்படி பேசினேன். அவள் உடனே பக்கத்து வீட்டுக்கு மாத்திரம் கேட்கும்படி பேசினாள். அதற்கு நான் அதற்கடுத்த வீட்டுக்கு மட்டும் காது கேட்கும்படி பதில் சொன்னேன். அதற்கு அவள் அதற்கும் அடுத்த வீட்டுக்கு மாத்திரம் கேட்கும்படி விடை இறுத்தாள். இப்படியாக மாறி, மாறிப் பேசிக் கொண்டே போனோமே?

......அட கழுதை! ஞாபகம் இருக்கிறதா? அதுதான் உன் பொக்கை வாயைக் காண்பித்துச் சிரிக்கிறாயா?......இனிமேல் பொக்கை வாய் என்று சொன்னால் நீ சண்டைக்கு வந்தாலும் வந்து விடுவாய். உனக்குப் பல் முளைக்க ஆரம்பித்து விட்டது.

சரி, நாங்கள் இருவரும் எதற்காக அப்படித் தொண்டையைக் கிழித்துக் கொண்டோம் என்று தெரிந்து கொள்ள உனக்கு ஆவலாக இருக்கிறதல்லவா? இதோ சொல்லுகிறேன். எல்லாம் உன்னால்தான்.

என்ன அப்படி விழித்துப் பார்க்கிறாய்? 'புருஷன், மனைவி சண்டைக்கு நான் எப்படிக் காரணம்?' என்று கேட்கிறாயா? எல்லாம் உன் கல்யாண விஷயமாகப் பேசப் போய்தான்.

"என் கல்யாணத்தைப் பற்றி அதற்குள் என்ன அவசரம்? அதைப்பற்றி அதற்குள் என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது?" என்று கேட்கிறாயா?

நீ எந்த நாட்டில் பிறந்திருக்கிறாய் என்று தெரிந்தால் இந்தக் கேள்வியைக் கேட்க மாட்டாய். அதோ, அந்தப் புஸ்தகத்திலிருந்து கிழித்துக்கொண்டிருக்கிறாயே, அதுதான் நம் தேசத்தின் படம். நம் நாட்டுக்கு இந்தியா என்று பெயர்.

இந்தியா என்றால் சீமை என்று அர்த்தமல்ல. சீமை வேறு, இந்தியா வேறு! சீமை வழக்கங்கள் வேறு, நம் நாட்டு வழக்கங்கள் வேறு. சீமையில் பெண் பிறந்தால் அதன் கல்யாணத்தைப் பற்றிப் பேச மாட்டார்கள். ஆனால் நம் நாட்டில் பெண் என்று ஒருத்தி பிறந்து விட்டால், அவளை எப்படா ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்து வீட்டை விட்டு வெளியில் அனுப்புவது என்பதைப் பற்றித்தான் யோசனை.

உன் கல்யாண விஷயமாகச் சண்டை நிகழ்வது நேற்றுத்தான் என்று நினைத்துக் கொள்ளாதே. இந்தப் பத்து மாத காலமாக அதாவது நீ பிறந்ததிலிருந்து உன் கல்யாண விஷயமாக ஒரு நூறு பேரோடாவது நான் சண்டை போட்டிருப்பேன்.

எதற்காக அப்படி ஒரு மாதிரி என்னைப் பார்த்துச் சிரிக்கிறாய்? கல்யாண விஷயமாக எதற்காகச் சண்டை போடவேண்டும், பேசினால் போதாதா என்று கேட்கிறாயா?

நம் நாட்டின் விசேஷமே என்னவென்றால் கல்யாணம் என்றாலே அதற்கு அடுத்தபடியாக ஞாபகத்துக்கு வரும் வார்த்தை சண்டைதான். நீ இன்னும் சின்னக் குழந்தையாக இருப்பதால் உனக்கு விஷயம் தெரியவில்லை. நீ பெரியவளானதும் கல்யாண விஷயமாக நடக்கும் சண்டைகளைப்

பார்த்து உனக்கே சிரிப்பு, சிரிப்பாக வந்து கொண்டிருக்கும்.

முதலில் பிள்ளையும், பெண்ணும் ஒருவரை யொருவர் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்று சண்டை! பிள்ளையும், பெண்ணும்தான் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறவர்களானாலும் அவர்கள் சம்மதத்தை யாரும் கேட்க மாட்டார்கள். பெற்றோர்கள் தங்களுக்குப் பிடித்தமாய் இருக்கிறதா, அதனால் தங்களுக்கு அனுகூலம் உண்டா என்பதை மாத்திரம் கவனிப்பார்கள். இதனால் கல்யாண விஷயமாகப் பெற்றோர்களுக்கும், கல்யாணத்துக்கு நிற்கும், பிள்ளை பெண்களுக்கும் சண்டை ஏற்படுவதும் உண்டு.

சில சமயம் பிள்ளையோடோ, பெண்ணோடோ சண்டை வருவதற்கு முன்னர் பெற்றோர்களே தங்களுக்குள் சண்டை போட்டுக்கொள்வதும் உண்டு. நான் சரசுவைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளும் போது அப்படித்தான் உங்க தாத்தாவுக்கும், பாட்டிக்கும் இடையே பிரமாத சண்டை வந்து விட்டது.

உங்கள் தாத்தாவுக்கு என்னைப் பிடித்திருந்தது. சரசுவை எனக்குத்தான் கொடுக்கவேண்டும் என்று சொன்னார். ஆனால் உங்கள் பாட்டிக்கு என்னைப் பிடிக்கவில்லை. தாத்தா கட்சிதான் ஜயித்தது. அதனால் தாத்தா வீட்டில் தாத்தாதான் அதிகாரி, தாத்தாவைக் கைக்குள் போட்டுக் கொண்டால் போதும் என்று நினைக்காதே.

தாத்தா கட்சி ஜயித்ததற்கு முக்கியமான காரணம் சரசுவும் என்னைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்வேன் என்று பிடிவாதம் பிடித்ததுதான்.

மற்றப்படி நம் வீட்டில் சரசு எப்படி சர்வாதிகாரியாக விளங்குகிறாளோ, அதைப் போலத்தான் தாத்தா வீட்டில் பாட்டியும் சர்வாதிகாரியாக விளங்குகிறாள். ஆகவே பாட்டியின் தயவையே சம்பாதிக்கப் பார்!

என்னமோ சொல்லிக் கொண்டிருந்தவன் எங்கேயோ போய் விட்டேனே. என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்! ...... ஆம், கல்யாணம் ஆவதற்கு முன் பெற்றோர்களுக்குள் சண்டை; பிறகு கல்யாணம் நடக்கும்போது சம்பந்திகளுக்குள் சண்டை! பாக்கிச் சண்டைகள் நடக்காமல் இருந்தாலும் இருக்கலாம். நடக்க வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. ஆனால் சம்பந்திச் சண்டை கட்டாயம் நடந்துதான் ஆகவேண்டும் என்ற ஒருவித ஒப்பந்தமே இருக்கிறாப்போல் தோன்றுகிறது.

இதற்குப் பிறகு புருஷனும், மனைவியும் போட்டுக் கொள்ளும் சண்டைகளைப் பற்றி

## ஏது பாஷன்?







ஸ்ரீமதி புதுப் பாஷன் (தனக்குள்):—அடடா! இந்த நான்கு பேரும் கட்டிக் கொண்டிருக்கும் புடவைதான் பாஷன் என்று நினைத்து நான் மாற்றப்போக, அவர்கள் என் புடவைதான் புதுப் பாஷனாக்கும் என்று நினைத்து மாற்றிக் கொண்டு விட்டார்களே!

நான் உனக்குச் சொல்ல வேண்டியதில்லை. இந்தப் பத்து மாத காலமாகத்தான் நீ எல்லாவற்றையும் கவனித்து வருகிறாயே!

ஆகவே, உன் கல்யாண விஷயமாகவும் இதுவரை எத்தனையோ சண்டைகள் ஏற்பட்டு விட்டன.

முதல் சண்டை மதுரையில் ஆரம்பித்தது. உன் அத்தைக்கும் எனக்கும் சண்டை. உன்னைத் தன் பிள்ளை மணிக்குத்தான் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டும் என்று அத்தை வார்த்தையை ஆரம்பித்தாள்......என்ன கேட்கிறாய்? நீ மூன்று மாதக் குழந்தையாக இருக்கும்போது உன்னை மதுரைக்கு அழைத்துக் கொண்டு போனேனே, ஞாபகம் இல்லை? அப்பொழுது ஒரு ஐந்து வயதுப் பையன், மூக்கை ஒழுக விட்டுக்கொண்டு, அத்தை முந்தானையைப் பிடித்துக்கொண்டு அழுது கொண்டிருந்தானே, அவன்தான் மணி!

அந்தப் பயலைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்திருக்கிறார்கள். ஆனால் அவன் பள்ளிக் கூடத்திற்கே போகிறதில்லை. தற்காலப் பள்ளிக்கூடப் படிப்பினால் நன்மையை விடத் தீமைதான் அதிகம் என்று நாங்கள் எல்லாரும் பள்ளிக்கூடத்துக்குப் போய்த் தெரிந்து கொண்டிருக்கும் விஷயத்தை அந்தப் பையன் பள்ளிக்கூடம் போகாமலே தெரிந்து கொண்டிருக்கிறான்.

“பள்ளிக்கூடத்துக்கே போகமாட்டேன் என்கிறான், மக்கு! இவனுக்கு எங்க அனுவைக் கொடுக்க முடியாது!” என்று சொன்னேன். நான் அப்படி விளையாட்டாகச் சொன்னது உன் அத்தைக்குக் கோபம் வந்துவிட்டது. வந்துவிட்டாள் என்னுடன் சண்டைக்கு. உங்கள் இரண்டுபேரில் யார் அதிக அழகு, யாருக்குப் புத்திசாலித்தனம் ஜாஸ்தி என்று எங்களுக்குள் சண்டை வந்து விட்டது. நான் உன் கட்சியைத்தான் ஆதரித்துப் பேசினேன் என்பது உனக்கு ஞாபகம் இருக்கலாம்.

அன்றைக்கு உன் கல்யாண விஷயமாக ஆரம்பித்த சண்டைதான் இன்றுவரை இன்னும் முடியவில்லை. தன் பிறந்தவீட்டு வகையில் உறவான ஒருவனுக்கு உன்னைக் கொடுக்கவேண்டும் என்றான் சாரு. நான் முடியவே முடியாது என்றேன். சாரு சொன்ன பயல் இன்னும் பள்ளிக்கூடத்துக்குக்கூடப் போக ஆரம்பிக்கவில்லை. எப்பொழுது பார்த்தாலும் அம்மாவைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறான். இந்த அம்மாக் கோதண்டராமன் வாழ்க்கையில் என்ன பண்ணப் போகிறான் என்று நினைத்துத்தான் நான் உன்னை அவனுக்குக் கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டேன். என்ன அனு! நான் சொல்லுகிறது சரிதானா?

... அட கழுதை! என்னத்தைக் கிழிக்கப் பார்க்கிறாய்? பாரதியார் பாடல்களையா? கொண்டா புஸ்தகத்தை இப்படி! என்ன, கொடுக்க மாட்டாயா? உனக்கு இருக்கும் பிடிவாதம் வேறு யாருக்கு இருக்கும்? இப்பவே இத்தனை பிடிவாதமாக இருக்கிறவள் பின்னால் எங்கே நாங்கள் சொன்னபடி கேட்கப் போகிறாய்? வீணாக நானும் உங்கம்மாவும் உன் கல்யாணத்தைப் பற்றிச் சண்டை போட்டுக்கொள்கிறோமே, அதுதான் மிச்சமோ, என்னமோ!

★ ★ ★

## இது என்ன வார்த்தை!

“ஏய் ரிக்ஷா, நிறுத்து!” என்று சென்னையில் கூவுகிறவர் எல்லாருக்கும் அந்த வாகனம் ஜப்பான் தேசத்தில் முதன் முதலாக உபயோகிக்கப் பட்டதென்று தெரியுமா? “ஜின் ரிக் ஷா” என்றால் ஜப்பானிய பாஷையில் “மனித சக்தி வண்டி” என்று அர்த்தம்: அதாவது மனிதனுடைய சக்தியால் (இயந்திர சக்தி இல்லாமல்) ஓடும் வண்டி. இது ஆங்கிலத்தில் ‘ரிக்ஷா’ என வழங்கப்படுகிறது. தமிழிலும் இதே பெயர்தான்.

‘ஜின்’ என்ற முதல் பகுதி ஏன் தவிர்க்கப்பட்டது? மிக நீளமான பதத்தைக் குறுக்கி உபயோகிப்பது மனித இயல்பு. இது காரணமாயிருக்கலாம். ஆனால், ஏளனமான மற்றொரு காரணமும் இருக்க வேண்டும். மனிதனை வைத்து வேறொரு மனிதன் இழுக்கிறான் என்பதை வெளிப்படையாகச் சொல்லிக் கொள்ள வெட்கமாயிருப்பதால் ‘ஜின்’ (மனிதன்) என்ற பாகத்தை நாசூக்காக நழுவ விட்டிருக்கலாம் அல்லவா? —கே. எஸ். என்.



..முன்னமேயே

# லைப்பாய்

## பழக்கத்தையும் அவன் அறிந்திருக்கிறான்!



விளையாட்டுக் கருவிகளின் மூலம், அவன் மனதிற் கிசைந்தாற்போல கைகளை உபயோகிக்கும் பழக்கத்தை யடைகிறான். விளையாடும் பொழுதும், தன் வீட்டிலும் விளையாட்டுக் கருவிகளிலுங்கூட மறைந்திருக்கிற அழுக்கு அபாயத்திலிருந்து தினசரி லைப்பாய் சோப்பின் உபயோகத்தினால் காப்பாற்றிக் கொள்கிற அந்த பழக்கம், மகனைக் காப்பாற்றுகிற தென்பதை தாயார் கவனித்து வருகிறாள்.




**லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது.**

**அது ஒரு நல்ல பழக்கம்.**

L. 80-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# பர்மாவின் மத்திய பாகத்தில்

1944-ம் வருஷம் கோடை காலத்தில் பெருங்கவலைக் குள்ளாகியிருந்தோம். அதற்குப்பிறகு நாம் வெகுதூரம் முன்னேறிவிட்டோம். இந்தியப் படை வீரர், தம் தோழர்களான நேச நாட்டுப் படைவீரருடன் ஒத்திருந்து, மத்திய பர்மாவிலும், மேற்கு பர்மாவிலும் வெகுவாக அரண் செய்யப்பட்ட ஜப்பானியப் பாதுகாப்பிடங்களை ஓய்வில்லாமல் தாக்கி, அதுவும் திடீரென்று புகுந்து தாக்கி, பக்கவாட்டில் பாய்ந்து சென்று வளைந்து அடியோடு அழித்து விட்டனர். 80 000 சதுர மைல்களுக்குமேல், அதாவது, அந்நாட்டில் மூன்றில் ஒரு பங்குப் பகுதிக்குமேல் மீட்டுவிட்டார்கள். எதிரிகளில் ஒரு லட்சம் பேர்களுக்குமேல் சேதப்படுத்தி, ஐராவதி ஆற்றுக்கடுத்த சமவெளிகளுக்கு விரட்டிவிட்டனர்.

இந்த வெற்றி பெறுவதற்கு, எவ்வளவுதூரம் மக்கள் முயலவேண்டியிருந்தது என்பதுபற்றி தகுந்தபடி விவரித்துக் கூறமுடியாது.

நம்பமுடியாத பருவகால நிலைமையில், மலைக்காடுகளில் கொஞ்சமும் மனத்தளர்ச்சி கொள்ளாமல், எதிரிகளோடு போராடி அவர்களை விரட்டிவிட்டனர். இந்த எதிரி நமது எல்லைப்புறங்களுக் கருகில் இருந்த வரையிலும், அவர்கள் நமது அமைதிக்கும், பாதுகாப்புக்கும் என்றென்றைக்கும் பங்கம் விளைவிப்பவர்களாகவே இருந்து வந்தார்கள். ஜப்பான் கடைசியாக அடியோடு தோற்கடிக்கப்படுகிறவரை, இந்தியா ஆக்ரமிப்புக்கு ஆளாகாமல் இருக்க முடியாது.



எதிரி வெளிப்படும் பொருட்டு சீக்கிய பீரங்கிக்காரர்கள் பதுங்கிக் காத்துக் கொண்டிருக்கின்றனர்.




நமது டாங்கிகளில் ஒன்று ஜப்பானிய அரணைத் தகர்க்கிறபோது, தாக்குவ தற்கு சீக்கியர்கள் ஆயத்தமாகிறார்கள்.

## முடிவான வெற்றிபெற முந்துங்கள்

—— இந்திய சர்க்கார் தகவல், பிரசார இலாகா வெளியீடு. ——

## சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

# சோபனு சமர்த்

சோபனு பிரதி தினமும் கையாளும் ஒரு அழகிய வழக்கம் இதுதான். காலையிலும் மாலையிலும் அவர் தன் சருமத்தில் லக்ஸ் டாய்லட் சோப்பின் நுரையைத் தடவி, பிறகு சுத்த ஜலத்தில் அலம்புகிறார். "என் சருமத்தை அழகாகவும், பளிச்சென்றும், துய்மையாகவும், வைத்துக்கொள்ள நான் தவறாமல் செய்யும் முறை இதுதான்" என்று அவர் சொல்கிறார். இன்னும் அநேக சினிமா நட்சத்திரங்களும் அப்படியேதான் சொல்லுகிறார்கள்.




## லக்ஸ் டாய்லட் ஸோப்

LEVER BROTHERS (INDIA) LIMITED




| | | | |
|---|---|---|---|
| ★ | கிருஷ்ணன் | ★ | மதுரம் |
| ★ | காளி ரத்னம் | ★ | ராஜகாந்தம் |
| ★ | துரைராஜ் | ★ | ஜெயா |
| ★ | ராமச்சந்திரன் | ★ | பி. ஆர். மங்களம் |

மாதவன் முதலியோர் நடிப்பது

★

விவரங்களுக்கு எழுதவும் :

**அனுசூயா பிக்சர்ஸ்**

"காமதேனு"

53, உஸ்மான் ரோடு

தியாகராய நகர் :: மதராஸ்




அதிக வேலை, வியாகுலம், மிகுந்த பிரயாசை முதலியவைகளால் புஷ்டியான தாதுப் பொருள்கள் செலவழிவதால் உங்கள் சரீரம் குன்றிப் போய், பலஹீனமடைந்து தாழ்வுறுகின்றீர்கள். தாதுப் பொருள்களை மறுபடியும் பெறுவது அவசியம் — உங்கள் தேகத்திற்கு மறுபடியும் போஷாக்கு அளியுங்கள். அப்போது பழைய சுகத்தையும் பலத்தையும் அடையும் புதுமையான வழியை உணர்வீர்கள்.

டானிக் ஆகாரமாகிய விக்கல்ப் — சுத்தமாக, சரியாகப் பங்கிடு செய்யப்பட்ட ஒன்பது தாது உப்புக்களையும், அயோடின் ஆகாரத்தையும் உங்களுக்கு அளிக்கிறது. இத்தகைய உன்னதமான வஸ்துக்கள் உங்கள் தேகத்தில் சம்பந்தப்பட்ட உடனேயே நீங்கள் பலமடைய ஆரம்பிக்கிறீர்கள். சோர்வு போய் சுறுசுறுப்பு ஏற்படுகிறது. தாழ்மை மறைகிறது. பலஹீனம் போய் திடமேற்படுகிறது. புதுமையான சுகாதாரத்துடன் திகழ்கின்றீர்கள். இன்றே "விக்கல்ப்" சாப்பிட ஆரம்பியுங்கள்.

**VIKELP** MINERAL TABLETS

**விக்கல்ப் தாது பில்லைகள்**

Ad. No. 5437.

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்.

★

தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள்:
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி,
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 60,00,000
செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 33,61,250
ரிஸர்வ் நிதி ரூ. 33,62,500
டெபாஸிட்டுகள் ரூ. 10¾ கோடிக்கு அதிகம்

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.

N. P. B.

Regd. No. M 4392




ஸிம்ப்ஸன்



ஸிம்ஸன் முத்திரையுள்ள க்யாஸ்பிளாண்ட் எளிதில் புறப்படச் செய்யுந் தன்மையுள்ளது, தவிர, க்யாஸிலிருந்து பெட்ரோலுக்கோ, க்யாஸும் பெட்ரோலும் சேர்த்து ஓட்டுவதற்கோ, சுலபமாக மாற்ற பிரத்தியேகமாய்ச் செய்யப்பட்ட "ஸ்டான்ஸிம்கோ" "க்யாஸ் மிக்ஸிங் சேம்பர்" என்னும் கருவியை உடையது.

க்யாஸ் எவ்வளவு பரிசுத்தமாக இருக்கிறதோ அவ்வளவு மேன்மையான உழைப்பு

**ஸிம்ப்ஸன் & கம்பெனி லிமிடெட்.**
மவுண்ட்ரோடு. மதருஸ்.



1840ல் ஸ்தாபித்த ஓர் இந்திய தொழிற் சாலை

இன்றைய சிறந்த முதலீடு. நாஷனல் ஸேவிங்ஸ் ஸர்டிபிகேட்டுகள்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.